மலர் 16 இதழ் 140

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd. No. 1897

Phone No. 76190 76199

"நவமணி"

சந்தா விகிதம்

1—9—74 முதல்
தனிப் பிரதி 25 காசு

| | உள்ளூர் ஏஜண்டு மூலம் | தபால் மூலம் |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 7-50 | ரூ. 8-00 |
| 3 மாதம் | ரூ. 22-50 | ரூ. 24-00 |
| 6 மாதம் | ரூ. 45-00 | ரூ. 48-00 |
| 1 வருடம் | ரூ. 90-00 | ரூ. 96-00 |

# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 3—2—76 செவ்வாய் வெளியூர் 4—2—76 புதன்

ஜம்போ
திகில் கதை
3-ம் பக்கம்






நீதிவிசாரணை
உள்ளான
கருணாநிதி
ப. உ. ச.
அன்பில்
தர்மலிங்கம்
ஓ. பி. ராமன்
ஆதித்தனார்
மாதவன்




# 6 தி. மு. க. மந்திரிகள் மீது விசாரணை: நீதிபதி நியமனம்

## ஒரு வருடத்தில் அறிக்கை: மக்கள் சபையில் மந்திரி கூறிய விவரம்

புதுடெல்லி, பிப். 3—தமிழ்நாட்டின் முன்னாள் முதலமைச்சர் கருணாநிதி, அவருடைய மந்திரி சபையில் மந்திரி பதவி வகித்த மற்றும் 5 பேர் ஆகியோர்மீது விசாரணை நடத்துவதற்காக சுப்ரீம் கோர்ட் நீதிபதி ஆர். எஸ். சர்க்காரியா தலைமையில் ஒரு கமிஷன் அமைக்கப்பட்டுள்ளது.

1977 பிப்ரவரி மாதம் 1-ந் தேதிக்குள் இந்த விசாரணைக் கமிஷன் அதன் அறிக்கையை மத்திய அரசிடம் தாக்கல் செய்யவேண்டும் என்று உத்திர விடப்பட்டுள்ளது.

இந்த விசாரணைக்கமிஷன் அமைப்பு பற்றியவிவரங்களை இன்று மக்கள்சபையில் உள்துறை இலாகா ராஜாங்க மந்திரி ஓம் மேத்தா வெளியிட்டார்.

முன்னாள் முதலமைச்சர் கருணாநிதி, அவருடைய மந்திரிசபையில் மந்திரி பதவி வகித்த அன்பில் தர்மலிங்கம், மாதவன், ஆதித்தனார், ஓ.பி. ராமன், ப. உ. சண்முகம் ஆகிய 6 பேர் மீது இந்த நீதி விசாரணை நடத்தப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

சுப்ரீம் கோர்ட் நீதிபதி ஆர். எஸ். சர்க்காரியா இந்த ஒரு நபர் விசாரணை கமிஷனாக பணியாற்றுவார்.

1977 பிப்ரவரி மாதம் 1-ந் தேதி வாக்கில் இந்த விசாரணைக் கமிஷன் அதன் அறிக்கையைமத்திய அரசிடம் தாக்கள் செய்யும் என்று அறிவிக்கப்பட்டது.

அண்ணா தி.மு.க, தலைவர் எம், ஜி. ஆர். கம்யூனிஸ்டு தலைவர் எம். கல்யாணசுந்தரம், அ.தி.மு. க. எம், பி. க்களானமனோகரன், விஸ்வநாதன் ஆகியோர் மத்திய அரசிடம் அளித்த புகார் மனுக்கள் இந்த விசாரணைக் கமிஷனிடம் ஒப்படைக்கப் படுவதாக மந்திரிஓம் மேத்தா கூறினார்.

### 54 புகார்கள்

அந்த மகஜர்களில் மொத்தம் 54 குற்றச் சாட்டுகள் அடங்கியுள்ளன. அவைகளில் கருணாநிதி மீது 27 புகார்களும அவருடைய மந்திரி சபையில் மந்திரி பதவிவகித்தவர்கள் மீது 13 புகார்களும் உள்ளன. மீதி 14 புகார்கள் அதிகார துஷ்பிரயோகம் சம்மந்தப்பட்டவை என்று அறிவிக்கப்பட்டது.

மந்திரி ஓம் மேத்தாமேலும் கூறியதாவது:—

இந்த புகார்கள் குறித்து கருணாநிதியின் கருத்துக்களை நாங்கள் கேட்டிருந்தோம். கருணாநிதியின் கருத்துக்களுக்கு எம் ஜி ஆர் முதலானோர் அளித்த பதில்கள் குறித்தும் கருணாநிதியின் கருத்தைக்கேட்டுப்பெற்றோம்.

கருணாநிதியின் பதில் அளவில் ஏராளமாக இருந்த போதிலும், போதிய அளவுக்குத் தகவல் கொடுப்பவையாக இல்லை. பின்னர் அவரிடம் சில விளக்கங்களைக்கேட்டும் பெற்றோம் அவையும் பூரண திருப்தி அளிப்பவையாக இல்லை.

சமீபத்தில் புதிதாக வந்துள்ள ஊழல் புகார்களும் பரிசீலனை செய்யப்படுகின்றன. அவசியம் ஏற்பட்டால் அவையும் கமிஷனின் பரிசீலனைக்கு விடப்படும். கமிஷனின் தலைமை அலுவலகம் புதுடெல்லியில் இருக்கும் என்றார் மந்திரி ஓம்மேத்தா.

## கருணாநிதி படத்தை அகற்ற கோரிக்கை

கோவை, பிப், 3—பயணிகள் நிலையத்திலிருந்தும் போலீஸ் நிலையங்களிலிருந்தும் கருணாநிதி படத்தை அகற்ற வேணடும் என்று கோரிக்கை விடுக்கப்பட்டிருக்கிறது.

புது காங்கிரஸ் பொது செயலாளர் மரகதம் சந்திரசேகர் இன்று கோவை வந்தார். டி. கே. பழனியப்பன் மற்றும் பலர் அவரை வரவேற்றனர்.

கருணாநிதி படத்தை அகற்ற வேண்டும் என்று புது காங்கிரசார் அப்போது கேட்டுக் கொண்டனர்.

## 20 அம்ச திட்டத்தை எதிர்த்தவர்கள் விவரம்

மாறன் எம். பி.
கந்தப்பன் எம். பி.
மாரிசாமி (எம், பி.)
கயிலைமன்னன் (சிகப்பு நாடா ஆசிரியர்)
சாமிநாதன் எம். பி.
ஜெயராமன்
வை. பாலசுந்தரம்
நேதாஜி

தொழிற்சங்கம் வேண்டுகோள்

## கூட்டுறவு வங்கிகளில் தி.மு. க. தொடர்பை துண்டிக்க கோரிக்கை

மதுரை, பிப். 3— கூட்டுறவு வங்கிகளில் தி. மு. க. வுக்கு இருக்கும் தொடர்பை துண்டிக்க வேண்டும் என்று இந்திய தேசிய தொழிலாளர் சம்மேளனத்தின் மதுரை பிரிவு கோரியிருக்கிறது.

அந்த சம்மேளனம் நிறைவேற்றியுள்ள ஒரு தீர்மானத்தில் இது பற்றி அவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

தீர்மானத்தில் கூறப்பட்டதாவது:—

கூட்டுறவு வங்கிகளிலும், கூட்டுறவுத்துறையிலும் தலைவர்களுக்கும். டைரக்டர்களுக்கும் 3 ஆண்டு பதவி நீடிப்பை பழைய திமுக அரசு தந்திருக்கிறது.

பெரும்பான்மையான தலைவர்களும், டைரக்டர்களும் தி. மு. க. வைச் சேர்ந்தவர்கள். ஆகவே இவர்கள் பதவிகளை ரத்து செய்ய வேண்டும்.

இப்படிப்பட்ட பதவிகள் 20 அம்ச திட்டத்தை அமல்படுத்த வகைசெய்யும் முக்கிய பதவிகள் ஆகும். ஆகவே இதைச் செய்யவேண்டும் என்று கோரி இருக்கிறார்கள்.

### ஆலயங்களுக்கு ஆபத்து

ஆலயப் பாதுகாப்புக் கமிட்டித்தலைவர் ராமசாமி, கவர்னருக்கு அனுப்பியுள்ள ஒரு தந்தியில் திமுக ஆட்சியில் ஆலயங்கள் மோசமான நிலைக்கு ஆளாகி விட்டன. என்று தெரிவித்துள்ளார்.

## நவமணி ஏஜண்டுகளுக்கு அறிவிப்பு

ஜனவரி மாத பட்டியல் ஏஜண்டுகள் அனைவருக்கும் அனுப்பப்பட்டுவிட்டது. வரும் 10—2—76 தேதிக்குள் ஏஜண்டுகள் அனைவரும் பில் தொகையும் பாக்கியையும் தவறாமல் அனுப்பிவிட வேண்டும் என கண்டிப்பாக அறிவிக்கப்படுகிறது. தவறினால் எவ்வித முன் அறிவிப்பும் இன்றி கட்டு அனுப்புவது நிறுத்தப்படும். உடன் செயல்படவும்.

நிர்வாக இயக்குநர்
நவமணி,
சென்னை-600028.

தி.மு.க. ஆட்சியில் ஊழல்கள்

## தொழில் கூட்டுறவு நிறுவனங்களுக்கும் நீதி விசாரணை வருமா?

'லட்சுமி பிரியா'

தொழில் கூட்டுறவு நிறுவனங்களில் தி.மு.கவினர் அடித்த கொள்ளை பற்றி நீதி விசாரணை நடத்தப்படுமா என்று எதிர்பார்க்கப்படுகிறது.

கருணாநிதி மந்திரிசபை மீதான ஊழல் புகாரை விசாரிக்க ஒரு நபர் விசாரணை கமிஷன் அமைக்கப்பட்டிருக்கிறது.

'மந்திரிகள் மீது மட்டும் விசாரணை நடத்தினால் போதுமா என்று கேட்கிறார் பிரமுகர் ஒருவர்.

இரண்டு கவர் துண்டு ஆசாமிகள் திமுக மந்திரிகளின் தயவால் எல்லா நிறுவனங்களிலும் ஊடுருவி இருக்கின்றனர்.

தமிழ்நாட்டில் தொழில் கூட்டுறவு நிறுவனங்களில் நடைபெற்ற 'கொள்ளை' பற்றியும் ஒரு நபர் கமிஷன் விசாரணை செய்யவேண்டும்.

இந்த நிறுவனங்களில் சேர்க்கப்பட்ட தி. மு. க. 'பினாமி' பங்குதாரர்கள் கண்டுபிடிக்கப்பட்டு குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தப்படவேண்டும்.

வாரியங்களை அமைத்தவர்கள் தங்கள் வீடுகளுக்கு எவ்வளவு வாரிக்கொண்டு போனார்கள் என்பது பற்றியும் கமிஷன் விசாரணை செய்யவேண்டும் என்கிறார் அந்த பிரமுகர்.

போக்குவரத்து கழகத்தில் நியமிக்கப்பட்ட திமுகவினர் மீதும் விசாரணை வரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## கோட்டையில் கவர்னர்: இன்றும் ஆலோசனை

சென்னை, பிப். 3— கோட்டையில் கவர்னர் இன்றும் அதிகாரிகளுடன் ஆலோசனை நடத்தினார்.

அப்போது ஆலோசகர்களும் கலந்துகொண்டனர்.

## மதியழகன் ராஜினாமா

சென்னை, பிப். 3—திமுக சட்டக்குழு தலைவர் பதவியில் இருந்து கே. ஏ. மதியழகன் இன்று ராஜினாமா செய்தார்.

## அண்ணா நினைவு நாள்

சென்னை, பிப். 3—அண்ணா நினைவு நாளையொட்டி இன்று தமிழகம் முழுவதும அஞ்சலி செலுத்தப்பட்டது.

சென்னையில் அண்ணா சதுக்கத்தில் ஏராளமானவர்கள் தனித்தனியாக வந்து மலர் வளையம வைத்து அஞ்சலி செலுத்தினார்கள்.

## மக்கள் சபையை நீடிக்க மசோதா: தாக்கல்

புதுடெல்லி, பிப். 3— மக்கள் சபையின் ஆயுட் காலத்தை ஒரு ஆண்டு காலத்துக்கு நீடிப்பதற்கான மசோதா ஒன்று இன்று மக்கள் சபையில் தாக்கல் செய்யப்பட்டது.

மார்ச் 18 முதல் ஒரு ஆண்டுக்காலத்துக்கு மக்கள் சபை நீடிக்க மசோதா வகை செய்கிறது.

## அதிகாரி கைது

சென்னை, பிப். 3 – பெயரை மாற்றி மோசடி செய்ய முயன்றதாக வணிகவரி அதிகாரி ராஜகோபால் என்பவரை போலீசார் கைது செய்தனர்.

## யாருக்கு யார் "குரு"?

சென்னை, பிப். 3—கர்நாடக கவர்னர் உமாசங்கர் தீட்சித்தை தமிழ்நாடு கவர்னர் கே. கே. ஷா "எனது குரு" என்று வர்ணித்தார்.

நேற்று எழும்பூரில் நடந்த ராணி மெய்யம்மை மாணவிகள் விடுதி திறப்பு விழாவில் கவர்னர் ஷா இவ்வாறு தெரிவித்தார்.

கவர்னர் ஷா கூறியதாவது:—

உமாசங்கர் தீட்சித்துடன் 1932-ம் ஆண்டிலிருந்து எனக்கு பழக்கம் ஏற்பட்டு நாங்கள்நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கிறோம். அவர் தான் என்னை அரசியலில் அறிமுகப்படுத்தினார். நேர்மைக்கும், கடமை உணர்ச்சிக்கும் பெயர் பெற்றஅவரை எனது குருவாக மதித்து வருகிறேன் என்றார் கவர்னர் கே. கே. ஷா.

இதுகேட்ட பின்னர் கர்நாடக கவர்னர் உமாசங்கர் தீட்சித் குறிப்பிடுகையில் தாம் இருவரும் நெருங்கிய நண்பர்கள் என்றும், இவர்களில் யாருக்கு யார் குரு என்பதை விழாவுக்கு வந்திருக்கிறவர்களின் தீர்ப்புக்கு தாமவிடுவதாகவும் கூறினார். அப்போது பலத்த சிரிப்பொலி எழுந்தது.




**புதன், பிப். 4**

சென்னை-1
(416.7 மீ)

காலை
5-55 வந்தே மாதரம்
6-05 நாலடியார்
6-10 வந்தனை செய்வோம்
6-25 இன்றைய சிந்தனை
6-30 பள்ளுப் பாடுவோமே
7-00 தமிழ்மணம்
7-25 ரேடியோ கார்ட்டூன்
7-45 நகர்வலம்
8-00 சிந்தனைத்துளி
8-20 வி. சுப்பிரமணியம் —பாட்டு
9-30 ஒலிபரப்பு முடிவு
பகல்
12-02 திரைமெட்டுக்கள்
12-10 நடுநிலைப் பள்ளிகளுக்கு
12-50 திரைகானம்
1-00 திருச்சி அஞ்சல்
1-30 சி. ஆர். ரங்கநாதன் —புல்லாங்குழல்
2-10 உயர்நிலைப்பள்ளிகளுக்கு
2-30 ஆர். கோமளவல்லி —பாட்டு
3-00 ஒலிபரப்பு முடிவு
மாலை
5-00 ஒலிக்கதிர்
5-10 சி. ஆர். ரங்கநாதன் — புல்லாங்குழல்
5-30 தொழிலாளர்களுக்கு
6-05 திரைகானம்
6-15 வாத்திய விருந்து
7-00 திரைகானம்
7-25 விவசாயிகளுக்கு
8-00 விசாகை —நாடகம்
8-30 கவிச் சொல் கேளீர்
8-45 நாத இன்பம்
9-15 இசை செல்வம்
9-45 திரைமெட்டுக்கள்
9-50 புகையும் பொறியும் —சித்திரம்
10-00 திரைகானம்
11-05 ஒலிபரப்பு முடிவு

சென்னை 2.
(411.3 மீ)

காலை
6-55 வந்தேமாதரம்
7-25 அ.இ.ரே.பல்கலைக்கழக தபால் படிப்பு மாணவர்களுக்கு
7-45 நாத இன்பம்
8-20 ஒலிபரப்பு முடிவு
பகல்
12-40 மேற்கத்திய இசை
1-30 ஒலிபரப்பு முடிவு
மாலை
5-50 திரைமெட்டுக்கள்
6-00 மேற்கத்திய இசை
6-30 & 7-15 இளைய பாரதம்
8-00 விளையாட்டு செய்திகள்
8-15 இந்துஸ்தானி இசை
8-45 இந்தியில் செய்தி
9-15 ஸ்பாட் லைட்
9-30 தெலுங்கு நாடகம்
10-00 மேற்கத்திய இசை
11-00 ஒலிபரப்பு முடிவு

திருச்சி
(361. மீ)

காலை
6-00 வந்தே மாதரம்
6-10 காலைக் கதிர்
6-25 நெறிவிளக்கம்
6-30 விவசாயிகளுக்கு
6-35 சிந்தனைக்கினியவை
7-00 அறிவு வளர
7-25 இளைய பாரதம்
8-20 வளர்ச்சிக்கு வழி
8-25 திரைப்பட இசை
9-00 ஒலிபரப்பு முடிவு
பகல்
12-02 திரைகானம்
12-10 நடுநிலைப்பள்ளிகளுக்கு
12-50 தேச பக்திப் பாடல்கள்
1-00 பூவையர் பூங்கா
1-30 வாத்யகோஷ்டி
2-10 உயர்நிலைப்பள்ளிகளுக்கு
2-30 திரைகானம்
2-40 நலம்பட வாழ்வோம்
2-45 வண்ணச்சுடர்
3-00 ஒலிபரப்பு முடிவு
மாலை
5-30 தொழிலாளர்களுக்கு
6-10 சேவைச் செய்திகள்
6-40 கிராம சமுதாயம்
7-25 விவசாயிகளுக்கு
8-00 நாடகம் (சென்னை அஞ்சல்)
8-30 நினைத்தால் வாழ்லாம்
9-15 மதுரை எஸ். சோம சுந்தரம்—பாட்டு
10-30 ஒலிபரப்பு முடிவு

சென்னை 1-ல் தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15 ஆங்கிலத்தில் செய்தி பகல் 12-00, மாலை 2-00, 6-00, இரவு 9-00. மாநிலச் செய்திகள் பகல் 12-30, 6-30.

திருச்சி: தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15 ஆங்கிலத்தில் செய்தி: காலை 9-10, 12-00, 2-00, 6-00, 8-00.

விவிதபாரதி:
இரவு 9-15 விடுமுறைவாசம் —மேடை நாடகம் (2)

## ரூ. 5½ லட்சம் தங்கம் பறிமுதல்

நாகபுரி, பிப் 2—மத்திய சுங்க இலாகாவினர் திடீர் சோதனையிட்டு ரூ. 5½ லட்சம் மதிப்புள்ள தங்க நகைகளையும் 10 ஆயிரம் பெறுமான வெள்ளியையும் கைப்பற்றினர்.

மகாராஷ்டிரத்தில் உள்ள பந்தாரா நகரில், இந்தப் பொருள்கள் ஒரு ஆசாமியின் வீட்டில் இருந்து கைப்பற்றப் பட்டது.

# பிரதமர் இந்திராவும் 20 அம்ச திட்டமும்: 'நவமணி'ஜோதிடர்கணிப்பு

**பிரதமர் இந்திரா காந்திராயைப் பற்றியும், இருபது அம்சத் திட்டம் இந்தியாவின் எதிர்காலம் குறித்தும் 'நவமணி'யின் ஜோதிடர் கம்பிக்குடி சந்திர போஸ் விஞ்ஞான ஜோதிட முறையில் ஆராய்ச்சி செய்து, தமது புதிய கண்டுபிடிப்புகளை இங்கே எழுதியுள்ளார்.**

நமது பாரதப் பிரதமர் இந்திராகாந்தியம்மையாரின் ஜாதகப்படி அவர் உதித்த லக்கினம் சிம்மம். நடப்பு ஜாதக ரீதியில் சனி மகா திசையில் புதன் புக்தியாகும்.

## ஜோதிடரிடம் இந்திரா கூறியதென்ன?

நமது நாட்டுமக்கள் செய்த அதிர்ஷ்டத்தின் பயனாகவே நமக்கு இப்படி ஒரு சிறந்த பிரதமர் கிடைத்துள்ளார். அம்மையாரின் ஜாதகத்தை காலஞ்சென்ற எனது குருநாதா உலகப் புகழ்பெற்ற ஜோதிஷ மார்த்தாண்டம், ஜோதிட மன்னன் கே. எஸ். கே. அவர்கள் நன்கு ஆராய்ந்து ஏற்கனவே சிம்மலக்கினம் என்று நிர்ணயித்திருப்பதுடன் என்னிடம் நேரில் இது சம்பந்தமாக உறுதியாக சிம்ம லக்கினத்தில்தான் பிறந்திருக்கிறார் என்றும் கூறியிருக்கிறார். பிரதமரின் சென்ற கால வாழ்க்கை நிகழ்ச்சிகளுடன் பெரும் பகுதி ஒத்திருப்பது இந்த ஜாதகமேயாகும். இங்கு குறித்திருப்பது பிரதமரின் துல்லிய கணிதமுறை ஜாதகமாகும். 19-11-1917ல்

| | | | |
|---|---|---|---|
| | | வி 15 | கே 10-33 |
| | ராசி | | சனி 21-46 |
| சந் 5-45 | | | -36 / செ 6-23 |
| சுக் 21-6 ரா 10-33 | சூரி 4-9 பு 13-16 | | |

இரவு 11-39க்கு பிறந்தவர் நமது மதிப்பு மிக்க தலைவர்.

சூரிய மகாதிசையில் பிறந்த அன்று இருப்பு வருடம் 1, மாதம் 10, நாள் 12. ஒரு தேசத்தின் ஜாதகங்களை ஆராய்வதைவிட,

### பிரதமருக்கு கடிதம்

அந்த நேரத்தில், அந்த நாட்டின் ஆகசரீதியான தலைவருடைய ஜாதகத்தில் அவர் ஆட்சிக் காலத்தில், எந்த அளவு ஜனங்களுக்கு நன்மை, அல்லது தீமை ஏற்படுகிறது என ஆராய்ந்து அறிவது, மிக முக்கிய ஜோதிட ஆராய்ச்சி முறைகளில் ஒன்றாகும். இந்த ரீதியில் ஆராயப் புகுவோமானால் சனி மகா திசையில், புதன் புக்தி நமது பிரதமருக்கு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. நடப்பு சனி திசையில் நாட்டுக்கும் நாட்டுமக்களுக்கும் பிரதமரால் எல்லையற்ற நன்மைகள் ஏற்படுமென்பதை திண்ணமாக அறிய முடிகிறது. ஏற்கனவே நான் பிரதமர் அவர்களுக்கு 24-5-1975-ல் எழுதிய கடிதத்தில் நமது பிரதமர் எப்படியும் கோர்ட் கேசில் வெற்றி பெற்று விடுவார் என்றும், 1977 ஆகஸ்ட் முதல் மிகவும் பிரகாசமானதும் வெற்றிகரமானதுமான எதிர்காலம், மிக மிக உறுதியாக இருப்பதாகவும் தெரிவித்திருந்தேன். அதே ரீதியில் 1976-ம ஆண்டு ஜூன் மாதம் 1977 ஜூலை வரை உள்ள காலத்தை சுமாரான காலமாகவே குறித்து இன்னும் சில விஷயங்களையும் தெரிவித்திருக்கிறேன், முதலாவதாக நீதிமன்ற வழக்கில் நமது பிரதமர் வெற்றி அடைந்தது நாம் அறிவோம். இந்த வெற்றி நமது நாட்டு மக்களுக்கே கிடைத்த வெற்றி என்பதை ஜாதக ஆராய்ச்சி மூலமாக தெரிந்துக் கொள்ளவாம்.

### விலைவாசி குறையும்

பிரதமரின் ஜாதகத்தில் ஏழாமிடம் என்பது (Public) பொது ஜனங்களைக் குறிப்பதாகும். அதுபோல் ஆறுமிடமென்பது எதிரிகளைக் குறிப்பதாகும். சனி திசையில் நாட்டு மக்களுக்கு அதிகமான அபிவிருத்தியும், விஞ்ஞானம்,

மற்றும் தொழில் துறைகளில் சிறந்த முன்னேற்றமும் காணப்படுகிறது. இதற்கு சனி புதன் சாரமேறி நிற்பதுவேயாகும். மேலும் 1977 ஆகஸ்ட் மாதத்தில ஆரம்பிக்கும் சுக்கிரபுக்தி, தனது சுயசாரத்தில், ஏழாமிடமான (Public) பொது ஜனங்களுக்கு லாபத்தில் அமைந்து பலம் பெறுவதால், ஜனங்களுக்கு 1977 ஆகஸ்ட்

ஜோதிடத் திலகம்
கம்பிக்குடி சந்திரபோஸ்

மாதத்துக்குமேல் தொடர்ந்து அதிக நன்மைகளும் நாட்டில் விளைநிலங்களில் உற்பத்தி அபரிமிதமாக பெருகுதலும் விலைவாசிகள் எதிர்பார்த்ததைவிட குறைந்தும் மக்கள் நன்மை அதிகம் பெற்று சந்தோஷப்படுவார்கள். புதிய கட்டுமானங்கள் நாட்டில் அதிகரிக்கும், இதன் காரணமாக அதிகம் பேர் சொந்த வீடுகளைப் பெற்று மகிழ்வார்கள். நாட்டில் கலப்படம், திருட்டு, மோசடி போன்ற குற்றங்கள் மிகவும் குறைந்துவிடும்.

சினிமா நாடகம், இசை, டெலிவிஷன் போன்ற துறைகளில் அதிசயிக்கத்தக்க விதத்தில் முன்னேற்றம் பெற்று ஜனங்கள் பயன் பெறுவார்கள். பிரதமர் இந்தக் காலத்தில் யூகமாக செயல்படும், எந்தக் காரியங்களும் உன்னதமான பலனைக்கொடுக்கும். பொதுத் தேர்தல்களில் பிரதமரே சிறப்பாக வெற்றி பெற்று நாட்டு மக்களை இதுவரை யாரும் நடத்திச்சென்றிராத சிறந்த நன்மை கொடுக்கும்பாதையில் கொண்டுசெல்வார். எதிரிகளாக அமையும் யாரும், அம்மையாரை எதிர்த்து வெற்றி பெற முடியாது, 1976 ஜூலை முதல ஓராண்டு காலத்துக்கு கேது புக்தி சனி திசையில் நடைபெறும் காலத்தில் முக்கிய உறவினருக்கு பாதிடபும், உடல் நலம் விட்டுவிட்டு பாதித்தாலும், பூரணகுணம் உண்டாகும். 1983ம் ஆண்டுக்குள் இருபது அம்ச திட்டத்தின பெரும் பலன்களை ஜனங்கள் அடைந்துவிடுவார்கள். அடுத்து ஜாதக ரீதியாக 7 ஆண்டு காலம் இந்திய மக்கள் வாழ்வில பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படவேண்டிய உன்னதமான காலமாகும். நமது குடியரசு 26-1-1950ல் ஏற்பட்டது. இதில் உள்ள தேதி எண் 8-க்குள் அடங்கும். 26 ஆண்டுகள் என்பது 1976 ஜனவரி 26-ந் தேதியுடன் முடிவடைந்து விட்டதால், இனி இந்தியாவின் கஷ்டகாலங்கள் மறைந்து விட்டது. இனி நவீன பலமிக்க வல்லரசு இந்தியாவை நாம் காணலாம். நமது பொருளாதாரம் மிகவும் குறிப்பிடத்தக்க அளவில் உயரும். இந்தியத்தாய் விழிப்புற்றுவிட்டாள். இனி அவளுக்கு சோதனைக்காலம் கிடையாது. நாமும், நமது பிரதம மந்திரி அவர்களுக்கு உறுதுணையாக இருந்து நாமும் நமது வருங்கால சந்ததியினரும் சிறந்த நன்மைகளை பெற்று முன்னேறகடுமையாக உழைப்போமாக, அம்மையாருக்கு இறைவன் திருவருளால் நீண்ட ஆயுளும், சகல சௌபாக்கியங்களும் உண்டாகி நாட்டு மக்களுக்கு சிறந்த நன்மையும் ஏற்படும் என்பது திண்ணம்.

ஜெய்ஹிந்த்

# ஜனாதிபதி ஆட்சிக்கு வரவேற்பு: கவர்னருக்கு ஏராளமான தந்திகள்

சென்னை, பிப். 3—தமிழ் நாட்டில் ஜனாதிபதி ஆட்சி அமுல்படுத்தப்பட்டதை வரவேற்று கவர்னர் கே. கே. ஷாவுக்கு தந்திகள் வந்து குவிந்தவண்ணம் இருக்கின்றன.

குறித்த நேரத்தில் எடுக்கப்பட்ட தக்க நடவடிக்கை என்று பல்வேறு அமைப்புக்களும், ஸ்தாபனங்களும், முக்கியப் பிரமுகர்களும் கூறி இருக்கிறார்கள்.

ராஜ்ய சபையின் முன்னாள் உறுப்பினர் ஆர். டி. பார்த்தசாரதி, திருச்சி மாவட்ட வர்த்தக சபைத்தலைவர் எஸ். கே. சம்பந்தன், கோவை வீனஸ் கலாச்சார அகாடமியின் தலைவர் ஆகியோர் அனுப்பியுள்ள தந்தியில் நீண்டகாலமாக ஒத்திப் போடப்பட்ட நடவடிக்கை இப்போது நிறைவேற்றப்பட்டதாக வரவேற்றுள்ளனர்.

கைத்தறி மற்றும் விசைத் தறியாளர்கள் சம்மேளனத்தினர் ஜனாதிபதி ஆட்சியை வரவேற்பதாக வையம்பமல ஈ. ஆர். ஈ. சம்மேளனத் தலைவர் சண்முகராயன் அவரது தந்தியில் குறிப்பிட்டுள்ளார்.

ஜனாதிபதி ஆட்சியில் வைத்துள்ள நம்பிக்கையை வலியுறுத்தி ஒத்துழைப்பு தருவதாக திருச்சி மாவட்ட வர்த்தக சபைத் தலைவர் கூறியிருக்கிறார்.

உயர்நீதிமன்ற முன்னாள் நீதிபதி பஷீர் அகமத்சயத் அனுப்பிருக்கும் தந்தியில் ஜனாதிபதி ஆட்சியால் நாடு முன்னேறும் என்றும் சிறுபான்மையினர் நலன் காக்கப்படும் என்று நம்புவதாகவும் தெரிவித்திருக்கிறார்.

அண்ணா திமுக வழக்கறிஞர்கள் சங்க கலைவினர் பி. எச். பாண்டியன் வெளியிட்டுள்ள அறிக்கை ஒன்றில் மக்களின் நீண்டநாள் கோரிக்கை நிறைவேறியிருப்பதாகத் தெரிவித்தார்.

# 608 பேரன்களின் 105 வயது பாட்டிக்கு பல் முளைக்கும் விந்தை

காத்மண்டு பிப், 3— 105 வயதான பாட்டிக்கு புதிதாக பல்முளைக்க ஆரம்பித்திருக்கிறது.

இந்தப் பாட்டியின் பெயர் ஹரிமாயா கதாரியா என்பதாகும், நேபாளத்தைச் சேர்ந்த இவர இந்திய எல்லையை ஒட்டி ஒரு கிராமத்தில் வசித்து வருகிறார்,

அவருக்கு இப்போது இளமை திரும்ப ஆரம்பித்திருக்கிறது. நரைத்தமுடி கறுப்பாக ஆரம்பித்திருக்கிறது. புதிதாக இரண்டு பற்கள் முளைக்கவும் ஆரம்பித்திருக்கிறது.

இவருக்கு இப்போது வாழ்ந்து கொண்டிருக்கும் 8 மகள்கள் உட்பட 608 பேரன்கள், கொள்ளுப் பேரன்கள் இருக்கிறார்களாம். ஒரு மகளுக்கு 87 வயதாகிறது.

9 வயதில் திருமணமான இவருக்கு இனிப்புப்பலகாரங்களும் தேநீரும் பிடிக்குமாம்.




## "தயவுப் பெருநெறி"

(சுவாமி சரவணனந்தா)

(அருட்பிரகாச வள்ளலார் காட்டிய சமரச சுத்த சன்மார்க்க கொள்கை விளக்கம்)

### 200. தயவு ஒளியில் அருட்பெருஞ்ஜோதி அகவல் விளக்கம் (180)

369. மண்ணினிற் பொன்மை வகுத்ததில் ஐமையை
370. அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

எல்லாவற்றிற்கும் அகத்தே இருக்கின்றது கடவுள் உண்மையாம் அருட் ஜோதி; இது சுத்த தெய்விகப் பொன்னாக உள்ளதாம். இந்த உள்ளொளிர் பொன் வெளிப்படுமுன், அனுபவத்தின் பொருட்டு ஐந்து நிலைகளைக் கடக்கவேண்டியுள்ளனவாம் இவ்வகநிலை அனுபவம், சுத்தசன்மார்க்கத்தில், சாக்கிராதீதம் என்னும் சாக்கிரத்தோடு கூடிய துரியாதீதத்தில் வெளியாவதாம். உலகியவிலும் மண்ணில் ஐம்பொன்னிலையின அடிதளத்தினின்று வெளிப்படுகின்றதான் புறப்பொன்னாக உள்ளதாம்.

வள்ளலார் மண்ணுடம்பு, பொன்னுடம்பாக ஆக்கப்பெற்றது, சுத்த அருள் அனுபவத்தில, கடவுள் அருட்பொது வாழ்வு ஏற்று, அருட் ஜோதிமயமானபோதுதான் என்று அறியலாகும். ஐம்பூதங்கட்கும், படிப்படியாக ஓரியல் மிகுந்துள்ளதைச் சுட்டவே ஈண்டு, மண்ணின் ஐநிலை, ஐமை எனக்குறிக்கப்பெற்றுள்ளதாம்.

(தொடரும்)

## வரதட்சிணை: மாப்பிள்ளை கைது

சீத்தாமார்ஹி, பிப். 3—வரதட்சிணை வாங்கியதாகவும், கொடுத்ததாகவும் மணமகனும், மணமகளின் தந்தையும் திருமண மண்டபத்திலேயே கைது செய்யப்பட்டனர்.

சீத்தாமார்க்கு நகருக்கருக்கருகில் பஞ்காட்சிபாடு என்ற கிராமத்தில் இது நிகழ்ந்தது.

வரதட்சிணையாக அங்கு வைக்கப்பட்டிருந்த நகைகளையும், மற்ற பொருட்களையும் போலீசார் கைப்பற்றினார்கள்.

மணமகனின் தந்தை தப்பி விட்டார்.

# காங்கிரஸ் கட்சியில் யாருக்கு இடம்? பரூவா பேச்சு

புதுடெல்லி, பிப். 3—காங்கிரஸ் கட்சி எப்போதும் மோதலை விரும்பாது என்று அக்கட்சித் தலைவர் பரூவா தெளிவாக்கினார்.

தேசிய சக்திகளின் மாபெரும் ஒத்துழைப்புடன் ஜனநாயக முறையில் பிரச்சினைகளை அணுகுவதையே காங்கிரஸ் விரும்பும் என்று அவர் தெரிவித்தார்.

சோஷலிச கல்வி நிலையத்தினசார்பில் 20 அம்சதிட்டம் குறித்து நடத்தப்பட்ட தேசிய சம்மேளனக் கூட்டத்தை பரூவா துவக்கி வைத்து பேசினார்,

காங்கிரஸ் கொள்கைகளை ஆதரித்து கட்சியில் நம்பிக்கை வைத்திருக்கும் யாவரும் காங்கிரசில் சேரலாம் என்றும் அவர் கூறினார்.

ஆயினும் வந்து சேருபவர்களை எச்சரிக்கையுடன் கண்காணிக்கவேண்டுமென்று அவர் கூறினார்.

இந்தக் கூட்டத்தில் பேசிய சஞ்சய்காந்தி, இடது வலது சாரிக்கொள்கை பிரச்சினைகளில் ஈடுபட்டு காங்கிரஸ்காரர்கள் நேரத்தைவீணாக்கக் கூடாது என்று கூறினார்.

சில காங்கிரஸ்காரர்கள் "காபி ஹாட்டா" என்ற முழக்கத்தை உதட்டளவில் மட்டுமே பேசுகிறார்கள் என்று பரூவா பேசினார்.

ராஜ்ய சபையில்

# ஆள் குறைப்பு தடை மசோதா நிறைவேறியது

**புதுடெல்லி, பிப். 3—ஆட்குறைப்பு செய்வதற்கும் கதவடைப்பு செய்வதற்கும் அரசின் அனுமதியை முன் கூட்டியே பெறவேண்டும் என்பதை கட்டாயமாக்கும் தொழில் தகராறுகள் திருத்த மசோதா நேற்று ராஜ்ய சபையில் நிறைவேறியது.**

300 தொழிலாளர்களுக்கு மேல் வேலைசெய்யும் தொழில் நிறுவனங்கள் 1976-ம் வருடத்திய தொழில் தகராறுகள் திருத்த மசோதா இது.

தொழிற்சாலைகளில் வேலை நிறுத்தம் காரணமாக ஆள், மணிநேர இழப்பு நெருக்கடி நிலை அறிவிப்புக்குப் பிறகு வெகுவாகக் குறைந்துள்ளது. இருந்தபோதிலும் பல தொழிற்சாலைகளில குறிப்பாக பெரிய கம்பெனிகளில் வேலைக் குறைப்பு பெருமளவுக்கு நடைபெறுகிறது. மாநிலங்களில் உள்ள குறிப்பாக பல தனியார் நிறுவனங்களில் ஆள் குறைப்பு செய்யப்படுகிறது. தற்போதைய சூழ்நிலையில் உற்பத்திதான் அதிகரிக்கவேண்டும். ஆகையால், இத்தகைய ஆள் குறைப்பு, வேலைகுறைப்பு, கதவடைப்பு ஆகியவற்றில் தொழிற்சாலைகள் ஈடுபடுவதன் மூலம், உயர் லாபத்தை தொடர்ந்து பெறும் பொருட்டு விலைவாசியை உயர்த்துவதில் தொழில் நிர்வாகத்தில் ஒரு பிரிவினர் ஈடுபடுவதாகத் தெரிகிறது. இந்தப் போக்கை வளரவிட அனுமதித்தால் நாட்டின்பொருளாதாரத்தில் பணவீக்கத்தை கட்டுப்படுத்துவதற்காக இதுவரை மேற்கொண்ட எல்லா நிதி, பண வசதி சம்பந்தமான நடவடிக்கைகளினால் பலன் ஏற்படாது போய்விடும். என்று மத்திய தொழிலாளர் நல அமைச்சர் கே. வி. ரகுநாத ரெட்டி ராஜ்ய சபையில் தமது அறிக்கையில்குறிப்பிட்டுள்ளார்.

நெருக்கடி நிலை அறிவிப்பினால் உருவாகியுள்ள சாதகமான சூழ்நிலையை எவரும் தவறாகப் பயன்படுத்திக் கொள்ளக்கூடாது, உற்பத்திக்கு முட்டுக் கட்டைகள் போடுவோர், நாட்டு நலனுக்கு எதிராக செயல்புரிபவர்களாகக் கருதப்படுவார்கள் என்று சொன்ன அமைச்சர் ஒரு போக்காக, நிர்வாகத்தினர் வேலைக் குறைப்பு, ஆள் குறைப்பு, கதவடைப்பு ஆகிய நடவடிக்கைகளில் ஈடுபடுவதன்விளைவாக, தொழிலாளர் வர்க்கத்திடையே ஏற்பட்டிருக்கக் கூடிய தாழ்வு மனப்பான்மையைப் போக்க வேண்டியது அரசின் கடமையாகும் என்றார். நிர்வாகத்தினர்க்கு ஏற்படக்கூடிய தவிர்க்கக் கூடிய கஷ்டங்களைப் போக்கி உற்பத்தி திறனை அதிகரிக்கும் போக்கை பராமரிக்கும் நோக்கத்துடன் பார்க்கும்போது, வேலைக் குறைப்பு, கதவடைப்பு ஆகியவற்றில் நிர்வாகத்தினர்க்கு உள்ள உரிமைகள் மீது நியாயமான தடைகள் விதிப்பது தற்போது அவசியமாகியுள்ளது என்றார்.

மாநிலங்கள் அவையில் சமர்ப்பிக்கப் பட்டுள்ள மசோதாவில், 300 அல்லது அதற்கு அதிகமான தொழிலாளர்கள் பணிபுரியும் தொழில் நிறுவனங்கள் வேலைக்குறைப்பு, ஆள் குறைப்பு, கதவடைப்பு ஆகிய நடவடிக்கைகளில் ஈடுபடும் முன் தகுந்த அங்கீகாரத்தை அந்தந்த மாநில அரசுகளிடமிருந்து பெறவேண்டுமென்று கூறப்பட்டுள்ளது. தொழிலாளர்களுக்குமறுவாழ்வளிப்பதற்காகவும் தொழிலாளர் சமுதாயத்திற்கு பண்ட சப்ளை சேவை ஆகியவற்றை பராமரிப்பதற்காகவும் நிர்வாகத்தினரின் கட்டுப்பாட்டிற்கு மீறிய தவிர்க்க முடியாத சூழ்நிலை காரணம் தவிர மற்ற காரணங்களுக்காக மூடி வைக்கப்பட்டுள்ள தொழில் நிறுவனங்களை மீண்டும் துவக்கவும் இந்த மசோதா வகை செய்கிறது என்று அமைச்சர் கூறினார்.

இந்த அலுவலின் சிக்கலையும், நிர்வாகத்தினருக்கு ஏற்படக்கூடிய இடைஞ்சல்களையும் கருத்தில் கொண்டு, இந்த அலுவல்களைச் செய்து முடிப்பதற்கான கால வரம்பும் மசோதாவில் நிர்ணயிக்கப்பட்டுள்ளது என்று கே. வி. ரகுநாத ரெட்டி சொன்னார்.

## 5 பேர்களைக் கடத்திப்போய் ரூ. 14½ கோடி பெற்ற மோசடி கும்பல் கைது

ரோம், பிப். 3—ஐந்து பேர்களைக் கடத்திப்போய் சுமார் 14½ கோடி ரூபாய் (171 லட்சம் டாலர்) பணம் பறித்த சர்வதேச மோசடிக் கும்பல் ஒன்றை போலீசார் பிடித்துள்ளனர்.

அந்தக் கும்பலுக்கு இருவர் தலைவர்களாகவும், ஆறு பேர்கள் கையாட்களாகவும் இருந்திருக்கிறார்கள்.

தலைவர்கள் இருவரில் ஒருவன் சிலி நாட்டைச் சேர்ந்தவன்.

இந்தக்கும்பலின் கைவரிசை முக்கியமாக ரோம் நகரில் தான் நடந்திருக்கிறது. ஐந்து பேர்களை இந்தக் கும்பல் கடத்திச் சென்று பணயக் கைதிகளாக வைத்திருந்து 14½ கோடி ரூபாய் பெற்று விடுவித்ததாகக் கூறப்படுகிறது.

ரோம் நகரில் கைது செய்யப்பட்ட இந்தக் கும்பலின் மூளையாக இருந்தவர் பெயர் மாபியோ பெலிசினி என்பதாகும். அவரது வயது 36 இவர் இத்தாலியைச் சேர்ந்தவர்.

இவருடைய உதவியாளரான சிலி நாட்டைச் சேர்ந்தவர் பெயர் பாப்லோ பேருடோர்ஸ் இவருக்கு வயது 27.

பிடிபட்ட இந்தக் கும்பலிடம் இருந்து பெருந்தொகை கைப்பற்றப்பட்டு இருப்பதாக போலீசார் தெரிவித்தனர். பணயக் கைதிகளை விடுவிக்கக் கொடுத்தபோது குறியிடப்பட்ட நோட்டுக்கள் அதில் இருந்தன.

### வரி விளம்பரங்கள்

வைத்தியம்

பழனி டாக்டர் எஸ். காளிமுத்து அவர்களை திருச்சி 4-ந் தேதி காலை, பகல் அஜந்தா லாட்ஜ், கரூர் 4-ந் தேதி மாலை பெரியார் லாட்ஜ், தஞ்சாவூர் 5-ந் தேதி காலை ராஜா ரெஸ்ட் ஹவுஸ், திருவாரூர் 5-ந் தேதி மாலை அபூபக்கர் பில்டிங், நாகப்பட்டினம் 5-ந் தேதி மாலை தினகர விலாஸ் நோயாளிகள் நேரில் சந்திக்கலாம்.

[5]

# ★ ஜூடோ ★

"லட்சுமிபிரியா"

## உஷா வந்தாள்

காலை மணி 8 ஆகியும் பிரகாஷ் எழுந்திருக்க வில்லை. கட்டிலில் புரண்டு புரண்டு படுத்தவாறே இருந்தான். இரவு அலைந்த அசதி.

திடீரென்று காலிங்பெல் அடித்தது. பிரகாஷ் எழுந்தான். எதிரே இருந்தகண்ணாடியில் தலையை நீவிக்கொண்டான். நடந்து போய் கதவை திறந்தான்.

அங்கே—

ஒரு பெண் நின்றிருந்தாள். அதுவும் சாதாரணப் பெண்ணா?

பிரகாஷிற்கு வெட்கமாகப் போய்விட்டது. கசங்கிய "பைஜாமா" கலைந்த தலை, இவற்றோடு ஒரு கட்டழகியை சந்திக்க நேர்ந்தால் எந்த பிரம்மச்சாரிக்குத்தான் வெட்கமாக இராது.

தன்னையே பார்த்துக் கொண்டு அவன் நிற்பதைப் பார்த்தவுடன் அவளுக்கு சங்கடமாக இருந்திருக்க வேண்டும்.

'மிஸ்டர் பிரகாஷ் இருக்கிறாரா?' என்றாள் மெல்ல.

'உள்ளே வாருங்கள். நான் தான் அந்த அடிமடையன். உங்களைப்போல ஒருபெண்ணை இதுவரை வெளியிலேயே நிறுத்தி வைத்திருந்தேனே என்று அவளிடம் மன்னிப்பு கேட்பதுபோல் பார்த்தான் பிரகாஷ்.

அவள் உள்ளே வந்து அமர்ந்தாள். சுற்றிலும் பார்த்தாள். பிரம்மச்சாரி ஒருவனின் வீடு எப்படிஇருக்க வேண்டுமோ அப்படி இருந்தது. பொருள்கள் அங்கு மிங்குமாகக் கிடந்தன.

பேச்சை எப்படி ஆரம்பிப்பது என்று தெரியாமல் சற்று தயங்கியவாறு அவள் பேசாமல் இருந்தாள்.

"நீங்கள் . . . ."

என்று ஆரம்பித்தான் பிரகாஷ்.

'உஷா' என்றாள் அவள்.

"எஸ், மிஸ் உஷா. என்ன விஷயம்' என்று சொல்ல முடியுமா?"

"அதற்குத்தானே வந்திருக்கிறேன். எப்படி எங்கிருந்து ஆரம்பிப்பது என்று புரியவில்லை". "எல்லாவற்றையும் சொல்லுங்களேன், நான் கேட்க தயார், நான் இன்று ஆபீசுக்கு மட்டம் போடுவதென்று முன்னதாகவே தீர்மானித்து விட்டேன். முதலில் ஒரு கப் காபி சாப்பிட்டுவிட்டு பிறகு பேசலாம்" என்றவாறு எழுந்தான் பிரகாஷ்.

"ஓ, அதெல்லாம் வேண்டாம், நான் வந்த விஷயம் மிகவும் முக்கியமானது'என்று பரபரத்தாள் உஷா.

போலீஸ்காரனை யார்சாதாரணமாக பார்க்க வருகிறார்கள். பரவாயில்லை. நான் நன்றாகவே காபிபோடுவேன். நீங்கள் தைரியமாக சாப்பிடலாம் என்று சொல்லிக் கொண்டே ஈட்டரைப்போட்டான் பிரகாஷ்.

2 நிமிடத்தில் கையில் காப்பிக்கோப்பையுடன் வந்தான் பிரகாஷ், சாப்பிடுங்கள் மிஸ் உஷா.

"உங்கள் வீட்டில் ஊருக்கு போய் இருக்கிறார்களா?" என்று கேட்டவாறே காபி கோப்பையை உஷா எடுத்துக் கொண்டாள்,

ஏதோ பெரிய ஹாஸ்யத்தைக் கேட்டவன்போல் பிரகாஷ் கடகடவெனச் சிரித்தான்.

என்னடா, காபியெல்லாம் போடுகிறானே, இந்தக் காலத்தில் கல்யாணம் ஆனவர்களுக்குத்தானே இதெல்லாம் தெரியும என்று நினைக்கிறீர்களா? அடியேன் இன்னும் ஒண்டிக்கட்டைதான் என்று சொல்லிக்கொண்டே காப்பி கோப்பையை எடுத்தான் பிரகாஷ்.

"எனது அக்காவை ஒரு வாரமாக காணவில்லை. கேள்விப் பட்டிருப்பீர்கள் ஜூடோ ஷோபா என்று பெயர்" என்றாள் உஷா.

பிரகாஷ் நிமிர்ந்து உட்கார்ந்தான். எஸ். புரொசீட் என்றான் மிகுந்த கவனத்துடன்.

"நாங்கள் இருவரும் மந்தைவெளியில் ஒரு வாடகை வீட்டில் வசிக்கிறோம். என் அக்காவை உங்களுக்குத் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன்" என்று அவன் சம்மதத்தை எதிர்பார்ப்பது போல் அவனைப் பார்த்தாள்.

ஓ! கேள்விப் பட்டிருக்கிறேன். பார்க்க வேண்டும் என்றுகூட நினைத்தது உண்டு. ஒரு பெண் ஜூடோ பயிற்சிக் கழகம் நடத்துகிறாள். அந்த பெண்ணை பார்க்க வேண்டும் என்று நினைத்தது உண்டு. அதுவும் அந்த போர் முறை தெரிந்தவன் பார்க்க வேண்டும் என்பது இயல்பு. ஆனால் அதற்கான வாய்ப்பு எனக்கு இன்னும் கிடைக்கவில்லை. என்றான் பிரகாஷ்.

"இனியும் அந்த வாய்ப்பு கிடைக்குமோ என்பது சந்தேகமாக இருக்கிறது. ஒரு வாரத்திற்கு முன் வீட்டை விட்டு வெளியே போனவள் வரவில்லை". என்றாள் உஷா.

"ஏன் அப்படி நினைக்கிறீர்கள்?" என்றான் அவன்.

"அவள் செல்லக் கூடிய எல்லா இடங்களிலும்பார்த்து விட்டேன், கிடைக்கவில்லை" என்றாள் அவள்.

"அதற்கு நான் என்ன? செய்ய போலீசில் புகார் செய்யலாமே என்றான் பிரகாஷ்."

"இல்லை மிஸ்டர் பிரகாஷ். அவ்வாறு செய்ய எனக்கு விருப்பமில்லை. உங்களைப் பற்றி கேள்விப்பட்டிருக்கிறேன். குற்றவாளிகளுக்கு உங்கள் பெயரைக்கேட்டாலே குலைநடுக்கம் என்று எனக்குத் தெரியும். என் அக்கா பழகிய இடங்களை நினைத்து எனக்கு சந்தேகமாக இருக்கிறது. போலீசில் புகார்செய்தவுடன் எனது சந்தேகம் அனாவசியம் என்று தெரிந்தால் அதனால் எல்லோருக்குமே கெட்ட பெயர்" என்றாள் அவள்.

நானும் போலீஸ் இலாகாவை சேர்ந்தவன்தானே? என்னிடம்வரக் காரணம்' என்று கேட்டான் பிரகாஷ்.

அது எனக்கும் தெரியும் மிஸ்டர் பிரகாஷ் தனிப்பட்ட முறையில் உங்களைக் கேட்டுக் கொள்ளவே வந்தேன். நீங்கள் என் அக்காவை கண்டு பிடித்து தரவேண்டும்" என்று கெஞ்சுவதுபோல் கேட்டுக்கொண்டாள்.

"ஆகட்டும் மிஸ் உஷா, உங்களுக்காக எதைவேண்டுமானாலும் செய்யலாம். சொல்லுங்கள் என்றைய தினத்திலிருந்து ஷோபாவை காணவில்லை."

ஞாயிற்றுக்கிழமை மாலை வெளியில் போனவள் திரும்பி வரவில்லை என்றாள் உஷா.

அவள் மட்டும் தான் தனியாகப் போனாளா? என்று பிரகாஷ் கேட்டான்.

'ஆம்' என்று தலையசைத்தாள் உஷா 'நீங்கள் இருவர் மட்டும் தான் வீட்டில் இருக்கின்றீர்களா' தாய் தந்தை... என்று கேட்டான்.

சிறுவயதிலேயே அவர்கள் போய் சேர்ந்து விட்டார்கள். என்னை என் அக்காதான் வளர்த்தாள். என்னை ஒரு நல்ல நிலையில் வைத்திருப்பதே என் அக்காதான். நான் இப்போது . . . . கல்லூரியில் பி. ஏ. இறுதி ஆண்டு படிக்கிறேன் எனது அக்கா 'ஜூடோ' பயிற்சிக் கழகம் நடத்துகிறாள் பெரிய இடத்து பெண்கள் என் அக்காவிடம் 'ஜூடோ' கற்றுக் கொண்டிருக்கிறார்கள். எனவே பணம் பஞ்சமில்லாமல் செலவுக்குக் கிடைத்து விடும். என் அக்காவிற்கு வயது 30 ஆகியும் என்னால் திருமணம் செய்து கொள்ளாமலேயே கழித்து விட்டாள். ஆனால் அவளோடு பழகும் ஒரு சில மனிதர்களை எனக்குப் பிடிப்பதில்லை, அதற்காக ஒரு முறை என் அக்காவை எச்சரித்தும் இருக்கிறேன். "போடி பைத்தியக்காரி என்னிடம் வாலாட்டினால், அடுத்த முறை வாலாட்டுவதற்கு வால் இருக்காது 'என்று சிரித்துவிட்டு போய் விடுவாள், அசாத்திய துணிச்சல்காரி" என்று கூறி நிறுத்தினாள் உஷா.

திடீரென்று கேட்டு கொண்டிருந்த பிரகாஷ் சடேலென்று எழுந்து கதவருகே போனான். கதவில் காதைவைத்து உற்றுக்கேட்டான். பிறகு மறுபடியும் உஷா அருகில் வந்து அமர்ந்தான்.

ஒன்றும் புரியாமல் உஷா அவனைப் பார்த்தாள். உதட்டில் கைவைத்து பேசவேண்டாம் என்பது போல சைகை காட்டினான்.

"நான்எந்தமீட்டிங்கிற்கும் தலைமைவகிக்க வருவதில்லை, என்னை மன்னிக்கவேண்டும். அதுவும் கல்லூரி விழாக்களில் கலந்துகொள்ளும் அளவு நான் பெரிய மனிதன் இல்லை" என்றான் பிரகாஷ்,

உஷா புரிந்துகொண்டாள். யாரோ ஒட்டுக்கேட்கின்றார்கள். அதனால்தான் இவன் இப்படி பேசுகின்றான் என்று நினைத்து அதற்கு தகுந்தாற் போல் பேசினாள்" அப்படி சொல்லக்கூடாது. நீங்கள் கட்டாயம் வரவேண்டும், அதுவும் நகரில் இப்போது திடீர் திடீரென்று பெண்கள் காணாமல் போகிறார்கள். இந்த விஷயங்களைப் பற்றியெல்லாம் நீங்கள் பேசினால் பெண்களாகிய எங்களுக்கு எவ்வளவோ உதவியாக இருக்கும்' என்றாள் உஷா.

'நீங்கள் இவ்வளவு தூரம் வலுக்கட்டாயம் செய்யும் போது மறுத்தால் நன்றாக இருக்காது. உங்களுக்காக உங்கள் கல்லூரிக்கு நான் வருகிறேன். திருப்திதானே'?" என்று உரத்த குரலில் பேசினான் பிரகாஷ்.

"சரி நான் வரட்டுமா?' என்று கேட்டவாறு' எழுந்தாள் உஷா.

"ஆல் ரைட், போய் வாருங்கள்" என்றவாறு எழுந்தான் பிரகாஷ்.

பிரகாஷ் டக்கென்று அவளுக்கு முன்னால் கதவருகே சென்றான், கதவை திறந்தான்.

அங்கே—

யாரும் இல்லை.

கீழே குனிந்து தரையை ஆராய்ந்தான்.

அங்கே—

ஒரு கைக்குட்டை கிடந்தது விரைந்து சென்று பிரகாஷ் அதை எடுத்தான்.

"அதே கைக்குட்டை அதே போன்ற கைக்குட்டை என்று மனத்திற்குள் சொல்லியவாறே தன் பாக்கெட்டில் வைத்துக் கொண்டான்.

உஷாவும் அதைப் பார்த்தாள். எதுவும் கேட்கவில்லை, பிரகாஷ் மனம் வேகமாக வேலைசெய்தது.

"மிஸ் உஷா, உங்கள் விலாசத்தை தரவில்லையே?" என்று கேட்டான் பிரகாஷ். தனது கைப்பையை திறந்து அதிலிருந்து ஒரு சீட்டை எடுத்து அவனிடம் கொடுத்தாள்.

ஏதோ நினைத்துக்கொண்டவன்போல மிஸ் உஷா, உங்கள் அக்காவுக்கு தெரிந்த நண்பர்கள். நெருங்கிப்பழகியவர்கள்யாரையாவது சொல்ல முடியுமா?"என்றுகேட்டான்.

சற்று யோசித்துவிட்டு "அவள் அடிக்கடி போகுமிடம் ஓட்டல் 'கவேரா' தான் மற்றபடி அவளை நண்பர்கள் வீட்டுக்கு தேடிக்கொண்டு வருவது மிகவும் அபூர்வமே" என்றாள் உஷா.

ஓட்டல் 'கவேரா' என்றதும் பிரகாஷுக்கு மின்னல் அடித்தது போலிருந்தது.

'உன் அக்காவின் முகத்தில் அதாவது மூக்குக்கு கீழே ஒரு மச்சம் இருக்கிறதா' என்று மிகுந்த பரபரப்புடன் பிரகாஷ் கேட்டான்.

"உங்களுக்கு எப்படித்தெரியும் நீங்கள் என் அக்காவை பார்த்திருக்கிறீர்களா" என்று ஆர்வத்துடன் கேட்டாள் உஷா.

சற்று மௌனமாக இருந்து விட்டு "தெரியும் என்றுதான் நினைக்கிறேன். விபரம் பிறகு சொல்கிறேன். நீ வீட்டுக்குப் போ" என்று ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவாறு மரியாதையை விட்டு ஒருமையில் பேசினான் பிரகாஷ்.

அவன் அவ்வாறு ஒருமையில் அழைத்துப் பேசியது உஷாவுக்கு ஏனோ மிகவும் பிடித்திருந்தது.

(தொடரும்)

---

## தினப்பலன்

'நவமணிஜோதிடர்'

புதன் கிழமை

4—2—1976

இராக்ஷஸ ஆண்டு தை மாதம் 21-ந் தேதி சுக்ல சதுர்த்தி திதி மாலை 6-34 வரை. பிறகு பஞ்சமி திதி. உத்திரட்டாதி நட்சத்திரம் பூராநாள். சித்தயோகம். திருமண சுபமுகூர்த்தநாள்.

ராகுகாலம் பகல் 12 மணி முதல் 1½ மணி வரை.

எமகண்டம் காலை 7½ மணி முதல் 9 மணி வரை. வடக்கே சூலம்.

நல்ல நேரம்:—

காலை 9 மணி முதல் 10 மணி வரை. பகல் 1½ மணி முதல் 3 மணிவரை. இரவு 7 மணி முதல் 9 மணி வரை.

தின ராசி பலன்:—

மேஷம்—சுகம் உண்டு
ரிஷபம்—உறவினர் பகை
மிதுனம்—பணம் வரும்
கடகம்—வேலைகள் முடியாது
சிம்மம்—பொருள் செலவு
கன்னி—லாபம் உண்டு
துலாம்—பெருமை குறைவு
விருச்சிகம்—உடல் பலஹீனம்
தனுசு—தொல்லை மிகுதி
மகரம்—குடும்பத் தகராறு
கும்பம்—எதிர்ப்பு
மீனம்—சினிமா செலவு

---

## கூட்டுறவு வங்கிகளின் பணிகள்: ஜனாதிபதி யோசனை

கல்கத்தா, பிப் 3— ஒவ்வொரு துறையிலும் குறிப்பாக விவசாயத் துறையில் சமூக. பொருளாதார மாறுதல்களை ஏற்படுத்துவதில் கூட்டுறவு பாங்குகள் நல்ல தொருகருவியாக செயல்பட வேண்டும் என்று ஜனாதிபதி பக்ருதீன் அலி அகமது கூறினார்.

கல்கத்தாவில் மேற்குவங்க மாநில கூட்டுறவு வங்கியின் நிறுவன தினவிழாவை ஜனாதிபதி துவக்கி வைத்தார். அப்போது பேசும்போது அவர் கூறியதாவது:-

கிராமப் பகுதிகளில் தங்களது நடவடிக்கைகளை பெரிய அளவில் விரிவுபடுத்தவேண்டும். விவசாயிகள் நலனைக்காக்கபுதியகூட்டுறவு கொள்கை உருவாக்க வேண்டும். கூட்டுறவு இயக்கம் வலுப்படுத்தப்படவேண்டும்.

இவ்வாறு ஜனாதிபதி பக்ருதின் அலி அகமது கூறினார்.

மாநில முதல்வர் சித்தார்த்தசங்கர்ராய் தலைமை வகித்தார்.

---

## கைத்தறி ஏற்றுமதி அபிவிருத்தி கவுன்சில் ஊழியர் சங்கம்

சென்னை, பிப். 3—கைத்தறி ஏற்றுமதி அபிவிருத்தி கவுன்சில் ஊழியர்கள் சங்கத்தின் 5-ம் ஆண்டு பேரவைக் கூட்டம் 1ந்தேதி சென்னையில் நடந்தது.

புதுநிர்வாகிகள் தேர்தல் நடந்தபோது திண்டிவனம் ராமமூர்த்தி தலைவராக ஒருமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டார், ஆர். தாமோதரன் பொதுச் செயலாளராகவும், ஏ. ஜி. ராஜமனோகரன், கே. பிரபுதாஸ் ஆகியோர் துணைத் தலைவர்களாகவும் திருமதி சுஜாதா, இணைச் செயலாளராகவும் எஸ். அருணாசலம் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்,

---

ரூ. 11 கோடி சொத்து சேர்த்தாரா?

# நாசர்மீது ஊழல் புகார் விசாரிக்க கமிட்டி அமைப்பு

கெய்ரோ, பிப். 3—மறைந்த முன்னாள் எகிப்து ஜனாதிபதி நாசர் வெளிநாட்டு பாங்க் ஒன்றில் 11 கோடி ரூபாய்க்கு மேற்பட்ட சொத்து சேர்த்து வைத்திருந்தது உண்மையா என்று கண்டறிய குழு ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது

1957-ம் ஆண்டில் வெளிநாட்டு பாங்க் ஒன்றில் சுமார் 11 கோடி ரூபாயை நாசர் டிபாசிட் செய்து வைத்திருந்தாராம்.

இது உண்மையா என்பதைக் கண்டறிய எகிப்துபிரதமர் மம்தா சலீம் கமிட்டி ஒன்றை அமைத்துள்ளார்.

எகிப்திய மத்திய பாங்கின் தலைவர் தலைமையிலான இந்தக் கமிட்டி தன் விசாரணையை 3 நாட்களுக்குள் முடித்து அறிக்கை தர வேண்டும் என்று கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறது.

எகிப்திய பத்திரிகையாளர் கல்லால் எடின் உலுமாம்சி ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார். அதில் நாசர் மீது பல குற்றச்சாட்டுகள் சுமத்தப் பட்டிருக்கின்றன. இந்தப் புத்தகத்தின் சுருக்கத்தை கெய்ரோ வாரப்பத்திரிகை ஒன்று வெளியிட்டிருக்கிறது.

இந்த ரூ. 11 கோடியையும் மறைந்த சவூதி அரேபிய மன்னர் பைசல் நிதிக்காக அளித்தாராம்.

இந்தத் தொகையை வெளிநாட்டு பாங்க் ஒன்றில் தமது சொந்த பெயரில் நாசர் டிபாசிட் செய்தாராம்.

ஆனால் சவூதி அரேபியாவுக்கு அரசாங்க ஜானுவிலிருந்து இந்தப் பணத்தை திருப்பித் தர உத்தர விட்டாராம்,

இந்தக் குற்றச்சாட்டு உண்மையா என்பதை ஆராயுமாறு கமிட்டி ஒன்று அமைத்து பிரதமர் உத்தர விட்டுள்ளார்,

எகிப்தில் பத்திரிகைத் தணிக்கை 2 ஆண்டுகளுக்கு முன்பு அகற்றப்பட்டது. அதன் பிறகு நாசர் மீது பல குற்றச்சாட்டுகள் சாட்டியதகவல்கள் வெளிவரத் தொடங்கின.

---

## காமராஜர் விருப்பம் நிறைவேறியது: மணிவர்மா அறிக்கை

சென்னை, பிப். 3— ஜனாதிபதி ஆட்சியை வரவேற்று தென் சென்னை காங்கிரஸ் தலைவர் மணிவர்மா கூறியதாவது:—

பெரும் தலைவர் காமராஜ் விருப்பம் பூர்த்தி அடைந்து இருக்கிறது.

அவர் எதை விரும்பினாரோ அது நிறைவேற்றப்பட்டுள்ளது

இனிமேல் காங்கிரஸ் கட்சிக்குப் பெரும் பொறுப்பு இருக்கிறது. அந்தப்பெரும் பொறுப்பை காங்கிரஸ் இணைப்பை விரும்பாத ஒரு சில நண்பர்களும் புரிந்து கொண்டு இந்தப் புதிய சூழ்நிலையில் நடக்க வேண்டும். காமராஜர் விருப்பத்தை நிறைவேற்ற முற்படவேண்டும் என்றார்.

### ராசாராம் நாயுடு

எதிர்பார்த்தது நடந்துவிட்டது அதில் ஆச்சரியப் படுவதற்கு எதுவும் இல்லை என்றார்.

### கே.டி. கோசல்ராம்

தி.மு.க. ஆட்சிஒழியவேண்டும் என்று காமராஜர் கொண்டிருந்த விருப்பத்தை பிரதமர் இந்திரா நிறைவேற்றிவிட்டார் என்று கூறினார்.

---

## காகித பொருள் தயாரிப்பு: தொழில் இலாகா விளக்கம்

புதுடெல்லி, பிப். 3— சிறு தொழில் துறையில் உற்பத்தி செய்வதற்காக "காகிதப் பொருட்கள்" ஒதுக்கீடு சம்பந்தமான தற்போதைய உத்தரவு பற்றி மத்திய தொழில் சிவில் சப்ளை அமைச்சகம் விளக்கிக் கூறியுள்ளது.

வலைவான காகிதம் மற்றும் காகித அட்டை, காகித கார்ட்டன், காகிதப் பை, காகித உறை காகித நாப்கின், காகித கப், காகித அட்டைகள், 'ஸ்ட்ரா' காகித குழாய், "கோன்", காகிதக் கொள்கலன்கள், ஒட்டும் காகிதம், மெழுகுக் காகிதம், நீல அச்சுக் காகிதம், டெலிபிரிண்டரில் பயன்படுத்தப்படும் காகிதச் சுருள்கள், ஸ்டென்சில் காகிதம், டெலிபிரிண்டர் டேப்ரோலர் காகிதம், காகிதநூல், காகிதப் பட்டை, அலங்காரத்திற்குப் பயன்படுத்தப்படும் காகிதங்கள், நோட்டுப்புத்தக காகிதம், பைல் தயாரிப்புக்கான காகிதம், ரிஜிஸ்டர், நீர் உறிஞ்சு காகிதம், காகித லேபிள்கள், டிரேசிங் காகிதம், கார்பன் காகிதம் போன்றவை சிறுதொழில் துறைக்கு ஒதுக்கப் பட்டுள்ளன.

---

## தொழிற் பயிற்சியாளர் லட்சம் பேருக்கு உதவி தொகை உயர்வு

புதுடெல்லி, பிப். 3—தொழில் பயிற்சியாளருக்கு அளிக்கப்படும் உதவித் தொகையின் அளவை மத்திய அரசு உயர்த்தியிருக்கிறது. இந்த ஆண்டு ஜனவரி 23-ம் தேதி முதல் இது அமுல் ஆகும்.

தொழில் நுட்பம், மற்றும் தொழில் நுட்பம் அல்லாத பிரிவினருக்கும் இந்த உயர்வு கிடைக்கும்.

இத்தகவலை, மத்திய தொழிலாளர் நல அமைச்சர் கே. வி. ரகுநாத ரெட்டி, தமது அமைச்சகத்துடன் இணைந்துள்ள ஆலோசனைக் கமிட்டியின் உறுப்பினர்களிடம் தெரிவித்தார்.

### ஒரு லட்சத்து 20 ஆயிரம் பேருக்கு நன்மை

இந்த உயர்த்தப்பட்ட விகிதங்கள் பயிற்சி பெற்றுவரும் சுமார் ஒரு லட்சத்து 20 ஆயிரம் தொழில் பயிற்சியாளர்களுக்குப் பயனளிக்கும்.

தொழிற் பயிற்சியாளர்கள் இப்போது முதலாவது ஆண்டில் மாதந்தோறும் 130 ரூபாயும் இரண்டாவது ஆண்டில் மாதந்தோறும் 140 ரூபாயும் மூன்றாவது ஆண்டில் மாதந்தோறும் 150 ரூபாயும் நான்காவது ஆண்டில் அல்லது பயிற்சியின்போது மாதந்தோறும் 200 ரூபாயும் உதவித் தொகை பெறுவார்கள்.

இதைப்போலவே பொறியியல் பட்டதாரிகள் மாதந்தோறும் 280 ரூபாயும் பட்டப்படிப்பு கல்லூரிகளிலிருந்து வரும இடைநிலை வகுப்பு மாணவர்கள் மாதந்தோறும். ரூ. 130ம் டிப்ளோமாதாரர்கள் மாதந்தோறும் ரூ 180ம், டிப்ளோமா கழகங்களிலிருந்து வரும் இடைநிலை டிப்ளோமா பட்டதாரிகள் மாதந்தோறும் ரூ 150-ம் உதவித்தொகை பெறுவார்கள்.

### எண்ணிக்கை அதிகரிப்பு

ஒருமித்த முயற்சிகளின் பலனாக தொழிற் பயிற்சியாளர்கள் சட்டத்தின் கீழ் 15 புதிய தொழிற்சாலைகள் குறிப்பிடப் பட்டுள்ளன! இதனால் இத்தகைய தொழிற்சாலைகளின் மொத்த எண்ணிக்கை 201ல் இருந்து 216 ஆக உயர்ந்திருக்கிறது என்றும அமைச்சர் தெரிவித்தார். இதைப் போலவே, வர்த்தகத் தொழில் பயிற்சியாளருக்கு. கூடுதலான 43 வர்த்தக ஸ்தாபனங்கள் தெரிந்தெடுக்கப்பட்டுள்ளன. இதனால், இத்தகைய வர்த்தக ஸ்தாபனங்களின் எண்ணிக்கை 60-லிருந்து 103-ஆக உயர்ந்துள்ளது. இத்துடன், பொறியியல் பட்டதாரிகள், தொழில் நுணுக்கப் பயிற்சியாளர்கள் ஆகியோருக்காக பொறியியல் தொழில் நுட்பத் துறையின் கூடுதலான 57 விசேஷத் துறைகளும் இச் சட்டத்தில் சேர்க்கப் பட்டுள்ளன.

தனியார் துறையிலிருக்கும் பெருபளவு பணிக்குறைப்பு, கதவடைப்பு, ஆட்குறைப்பு, ஆகியவற்றைப் பற்றி உறுப்பினர்கள் மிகுந்த கவலையைத் தெரிவித்தார்கள். கவலையை பகிர்ந்து கொண்ட அமைச்சர் பணிக்குறைப்பு ஆட்குறைப்பு, கதவடைப்பு ஆகியவற்றைந் தவிர்ப்பதற்கு ராஜ்யசபையில் ஏற்கனவே ஒரு மசோதா கொண்டுவரப் பட்டுள்ளது என்று கூறினார். தவிர்க்கமுடியாத சூழ்நிலைகளின் காரணமாக நிர்வாகத்தினரின் கட்டுப்பாட்டையும் மீறி மூடப்பட்டிருந்தாலொழிய ஏற்கெனவே மூடப் பட்டிருக்கும் நிறுவனங்களை மீண்டும் துவக்குவதற்கு இந்த மசோதா வகை செய்கிறது. என்றார்.

---

## பிரதமருக்கு புதுகாங்கிரஸ் இளைஞர்பிரிவு தலைவர்கள் தந்தி

சென்னை, பிப், 3—தமிழ்நாட்டில் ஜனாதிபதி ஆட்சி கொண்டு வரப்பட்டதைப் பாராட்டி பிரதமர் இந்திராவிற்கு தமிழ்நாடு இளைஞர் புது காங்கிரஸ் தலைவர்கள் தந்தி ஒன்றை அனுப்பி உள்ளனர்.

ஆர். ஜகவீரபாண்டியன், வீ. ரா. சந்திரன், லாரென்ஸ் ஆகியோர் தந்தியில் கையொப்பமிட்டுள்ளனர். தந்தியில் கூறப்பட்டிருப்பதாவது:

தி. மு. க. அரசை டிஸ்மிஸ் செய்தது தேசவிரோத பிரிவினை சக்திகளுக்கு சரியான நேரத்தில் கொடுத்த பலத்த அடியாகும்.

இதனை நாங்கள் உளமார வரவேற்கிறோம்.

இவ்வாறு அந்த தந்தியில் கூறப்பட்டிருக்கிறது.

---

## விமானத்துக்கு விமானம் சவாரி

நியூயார்க், பிப். 3—இரண்டு மாபெரும் விமானங்கள், ஒன்றின் மேல் ஒன்று ஏறிச் செல்லும்காட்சியை நாளடைவில், அமெரிக்க மக்கள் காண்பார்கள். விண்வெளி விமானம் ஒன்றை வேறொரு விமானம் சுமந்து செல்லும்.

முக்கோணவடிவல் சிறகமைந்த விண்வெளி விமானத்தை ஏவுகணைகள் மூலம் விண்வெளிப் பாதையில் செலுத்திய பிறகு, இந்த விமானம் பூமிக்குத் திரும்பி விடும்.

டெக்ஸாஸ் மாநிலத்தில் ஹூஸ்டன் நகரிலுள்ள ஜான்ஸன் விண்வெளி நிலையத்தில் இப்பொழுது இதற்கான ஆய்வு நடந்து வருகிறது.

## கருணாநிதி மந்திரிசபை மீது ஊழல் புகார்கள்

# நீதிபதி விசாரணை டெல்லியில் நடக்கும்

## பட்டியலில் இதுவரை 74 புகார்கள்

புதுடெல்லி, பிப். 3—கருணாநிதி மந்திரிசபை மீது கூறப்பட்டுள்ள ஊழல் புகார்களை விசாரிக்க சுப்ரீம் கோர்ட் அல்லது ஹைகோர்ட் நீதிபதி தலைமையில் கமிஷன் அமைக்கப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இந்த விசாரணை டெல்லியில் சுமார் ஒரு வருடம் நடைபெறும் என்று தெரிகிறது.

அண்ணா திமுக தலைவர் எம் ஜி ஆர், கம்யூனிஸ்டு தலைவர் எம். கல்யாணசுந்தரம், அண்ணா தி மு கழக எம். பி.க்களான கே. மனோகரன், ஜி. விஸ்வநாதன், எம் சி. பாலன் ஆகியோர் மத்திய அரசிடம் கருணாநிதி மந்திரி சபை மீது ஊழல் புகார் மகஜர்களை தாக்கல் செய்திருந்தனர்.

### 74 புகார்கள்

கருணாநிதி மந்திரிசபை மீது 74 ஊழல் புகார்கள் கூறப்பட்டுள்ளன.

விசாரணையின்போது மேற்கொண்டு ஊழல் புகார்கள் அந்த பட்டியலில் சேர்க்கப்படலாம்.

## கவர்னர் அறிக்கை விவரம்

கருணாநிதி மந்திரிசபை மீது ஊழல் புகார்களைத் தெரிவித்து ஜனாதிபதிக்கு கவர்னர் கே. கே. ஷா அனுப்பிய அறிக்கையின் முதலாவது பகுதி நேற்று நவமணியில் வெளியாயிற்று.

அந்த அறிக்கையில் மேலும் கூறப்பட்டதாவது:

## அரிசி பேர ஊழல்

கவர்னருடைய அறிக்கையில் மேலும் கூறப்பட்டதாவது:-

1974ம் ஆண்டு மத்தியில் தஞ்சாவூர் மாவட்டத்திலிருந்து மற்றப் பகுதிகளுக்கு அரிசி நடமாட்டத் தடை நீக்கப்பட்டதன் விளைவாக திமுக கட்சி நிதிக்கும் தனிப்பட்ட தி.மு.க.வினருக்கும் ஏராளமான பணம் கொடுக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது அப்போது மாநிலத்தில் நெல் தேவைப்பட்டது. மாநிலத்தின் மற்றப் பகுதிகளில் அரிசி விலையைக் குறைப்பதற்காக வென்று நடமாட்டக் கட்டுப்பாடு நீக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. ஆனால் தஞ்சாவூர் மாவட்டத்திலிருந்து மாநிலத்துக்கு வெளியே உள்ள இடங்களுக்கு அரிசி கொண்டு செல்லப்படுவதில்தான் முடிந்தது. இந்த பேரத்தில் பல தி. மு.க. அரசியல்வாதிகளும் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள். தஞ்சாவூர் மாவட்டத்தில் இருப்பிலிருந்து கணிசமான பகுதி வெளியே கொண்டு சொல்லப்பட்ட பிறகு, ஒரு வாரத்தில் அந்தக் கட்டுப்பாடுகள் மீண்டும் விதிக்கப்பட்டன.

### வைத்திய கல்லூரி அட்மிஷன்

வைத்தியக் கல்லூரி அட்மிஷன் சம்பந்தமான அதிகாரங்களையும் திமுக அரசு குவித்துவைத்துக்கொண்டது. தங்களுடைய ஆதரவுபெற்ற மாணவர்களுக்குக் கல்லூரிகளில் இடம் கிடைப்பதை உறுதி செய்யும் வகையில் ஓர் ஏற்பாட்டை அவர்கள் உருவாக்கியதாகக் கூறப்படுகிறது. ஒவ்வொரு மாணவருக்கும் ரூ. 10,000 முதல் ரூ. 20,000 வரை பணம் அளித்தாலொழிய, அட்மிஷன் கிடைக்காது என்று கூறப்படுகிறது. உண்மையில் சில மிக நல்ல மாணவர்களின் நலன்களைப் பாது காப்பதற்காக நானே நேரில் தலையிட வேண்டியிருந்தது.

### பூச்சி மருந்து தெளிப்பு

இதுபோலவே விமானத்திலிருந்து பூச்சிமருந்து தெளிக்கும் வேலையும் பம்பாயிலுள்ள ஒரு விமான நிறுவனத்திடம் ஒப்படைக்கப்பட்டது. இது சம்பந்தமான காண்ட்ராக்ட், அந்த நிறுவனத்தின் ஏஜண்டான ஒரு நிறுவனத்துடன் செய்து கொள்ளப்பட்டது. தமிழ்நாட்டில் விமானம் மூலம் பூச்சி மருந்து தெளிப்பதற்காக விமானக் கம்பெனியிடமிருந்து இந்தக் கம்பெனி ஏராளமான கமிஷன் பெற்று வந்ததாகவும், இந்தக் கமிஷனில் பெரும்பகுதி சில மந்திரிகளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது என்றும் கூறப்படுகிறது.

### மின் நிலைய விற்பனை

தி. மு. க. மந்திரிசபையின் நிர்வாக முறைகேடுகளின் மற்ற அம்சங்களை பின்வருமாறு பிரிக்கலாம் நிர்வாக, நிதிமுறையின்மைகள், கட்சி நலனை வளர்ப்பதற்காக அப்பட்டமான அதிகார துஷ்பிரயோகம், தேசியக் கொள்கையின் அடிப்படை நோக்கங்களைத் தகர்க்க வேண்டுமென்றே முயற்சிகள், அவசர நிலை சம்பந்தமாக மத்திய அரசின் தாக்கீதுகள் புறக்கணிப்பு, அவசர நிலை அதிகாரங்கள் துஷ்பிரயோகம்.

கட்சி நலனுக்காக அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்வதில் பரவலாக ஊழலை அனுமதித்து விட்டது என்ற பெயரை ஆளும் கட்சி சம்பாதித்துள்ளது.

நிர்வாக, நிதி விஷயங்களில் திமுக அரசின் சில முறை தவறிய செயல்களுக்கு உதாரணமாக குறிப்பிட்டு சமய நல்லூரில் அனல் மின்சார நிலையம் ரூ. 59.16 லட்சத்துக்கு ஒரு நிறுவனத்துக்கு விற்கப்பட்டது. இந்தத் தொகை மார்க்கெட் விலையை விட கணிசமாகக் குறைவாகும்.

இந்த நிறுவனம் ஜெனரேட்டரின் ஒரு பகுதியை பல்வேறு கோஷ்டிகளுக்கு விற்று ரூ. 9.50 லட்சம் லாபம் சம்பாதித்துள்ளது என்பது இதை நிரூபிக்கிறது. இந்த விற்பனைக்குப் பிறகும் கூட, அந்த நிறுவனத்திடம் மின்சார நிலையத்தின் விற்காத பாகங்கள் இன்னும் இருப்பதாகவும் இவற்றின் மதிப்பு ரூ. 14.25 லட்சம் என்றும் கூறப்படுகிறது. தி.மு.க. கட்சி நிதிக்காகப் பணம் பெற்றுகொண்டு இந்த பேரம் முழுவதும் நடந்திருப்பதாகக் கூறப்படுகிறது.

## கஜானா காலி

நான்காவது திட்டத்தின் கீழ் தீண்டாமை ஒழிப்புப் பிரசாரத்துக்காக ஒதுக்கப்பட்ட ரூ. 16 லட்சம் தகவல் பிரசார இலாகாவுக்குத் திருப்பி விடப்பட்டு, அது வேறு காரியங்களுக்குப் பயன்படுத்தப்பட்டது. மாநில அரசின் வழி, வகைகள் நிலைமை மிகவும் சிரமமாய் இருந்தும் பயனற்ற காரியங்களுக்குச் செலவழிப்பதற்காக அரசாங்கக் கஜானா காலி செய்யப்பட்டது. இது சம்பந்தமாகப் பல புகார்களை சுட்டிக்காட்ட முடியும்

### சிம்சன் நிர்வாகத்தில் தலையீடு

கட்சி நலனை வளர்ப்பதற்காக திமுக மந்திரிசபை தான் தோன்றித்தனமான முறையில் செயல்பட்டு வந்து 10,000 பேர் கொண்ட சிம்சன் தொழிலாளர் யூனியன் விவகாரத்தில் திமுக நிர்வாகம் தலையிட்டது இதனால் சிம்ஸன் தொழிற்சாலைகளில் முன்பு எப்போதும் இல்லாத அளவு கலவரம் மூண்டது. கட்சிக்கு நிதி திரட்டுவதற்காக அரசாங்க இயந்திரம் தாராளமாகப் பயன்படுத்தப்பட்டது.

அரசாங்கக் கொள்கைகளை உருவாக்குவதில் தனிப்பட்ட விரோதமும் முக்கிய அம்சமாக இருந்திருக்கிறது சொந்த குரோதம் காரணமாக வேலூரில் உள்ள பிரசித்து பெற்ற கிறிஸ்துவ மிஷனரி நிலையம், போலீஸ், அதிகார அமைப்பு மூலம் நிர்ப்பந்தத்துக்கு உள்ளாக்கப்பட்டது மற்றொரு சம்பவத்தில் அதிமுக பொருளாளர் கைது செய்யப்பட்டு அடிக்கப்பட்டு, அவர் மீதும் மற்றும் 23 அ.தி.மு.கவினர் மீதும் வழக்கு போடப்பட்டது. ஆனால், கோர்ட் எதிரிகளை விடுதலை செய்து, "பாதிக்கப்பட்டவர்களை கோர்ட்டுக்கு எதிரிகளாகக் கொண்டு வந்ததற்காக" போலீஸார் மீது கண்டனக் குறிப்புகளை கூறியுள்ளது.

### அவசர நிலை

அவசர நிலைமை பிரகடனம் சம்பந்தமாக மத்திய அரசின் உத்தரவுகள் ஒரேயடியாகப் புறக்கணிக்கப்படவில்லைஎன்ற போதிலும். மாநில அரசின் மனப்பான்மையில் ஒத்துழைப்பு காணப்படவில்லை.

தடை செய்யப்பட்ட ஸ்தாபனங்களைச் சேர்ந்தசிலர் தான் மாநில அரசால் கைதுசெய்யப்பட்டனர். ரகசியத் தூண்டுப் பிரசுரங்கள் சுற்றுக்குவிடப்படுவதைத் தடுக்கப் போதுமான நடவடிக்கைகள் எடுக்கப்படவில்லை. இது அவர்களுடைய அரை மனதான போக்கையே காட்டுகிறது.

இந்தியப் பாதுகாப்பு உள்நாட்டுப் பந்தோபஸ்து விதிகள் 47 (1) பிரிவின் கீழ் தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட அதிகாரங்களை எதிர்க்கட்சிகளைச் சேர்ந்த பத்திரிகைகளை ஒடுக்கவே மாநில அரசு துஷ்பிரயோகம் செய்யப்பட்டது.

மாநில சுயாட்சி கோரிக்கை என்ற பெயரில், முதலமைச்சர் மற்ற அமைச்சர்கள் உள்பட திமுக தலைவர்கள் மாநில சுயாட்சி வழங்கப்படாவிட்டால் பிரிவினை

(5ம் பத்தி பார்க்க)

## தி. மு. க. மாநாடு

1975 டிசம்பர் 25 முதல் 28 தேதிகளில் கோயமுத்தூரில் நடந்த திமுக மாநில மாநாட்டில் கட்சியின் மாநில சுயாட்சிக் கோரிக்கை ஏற்றுக்கொள்ளப்படாவிட்டால் "தனித் தமிழ்நாடு" கோரிக்கையை மீண்டும் புதுப்பிப்பதைத் தவிர வேறுவழியில்லை என்று கூறப்பட்டது.

மேலே கூறிய நோக்கத்தை அடைவதற்காக திமுக கட்சி, அரசு சார்பில் இடைவிடாத பிரசாரம், கிளர்ச்சிப்போக்கு வன்முறை சூழ்நிலைமைக்கு மறைமுகமான ஊக்கம் ஆகியவை தேசிய ஒருமைப்பாடு கொள்கைக்கு முரணாகும். இது தக்க சமயத்தில் கட்டுப்படுத்தப்படாவிடில், மிகவும் நாசகரமான விளைவுகளை உண்டுபண்ணும்.

இத்தகைய சாதனை உள்ள ஒரு மந்திரி சபை தொடர்ந்து நீடிக்க அனுமதிக்கப்பட்டால், அது ஜனநாயக நியதிகளையும் ஜனநாயக செயல்பாட்டையும் கடுமையாக பாதிக்கும் என்பதை மேலே நான் குறிப்பிட்ட உண்மைகளும் சூழ்நிலைமைகளும் தெளிவாகப் புலப்படுத்தும்.

"மேலே பிரஸ்தாபித்த நிர்வாக, நிதி முறைமையின்மைகள், அரசாங்க இயந்திரத்தில் இடைவிடாத குறுக்கீடு திமுக தலைவர்களும் ஊழியர்களும் விரிவான அளவில் சொத்துக்களை சேர்த்திருப்பதும், அவசர நிலையைச் சந்திக்க மத்திய தாக்கீதுகளை நிறைவேற்றுவது சம்பந்தமாக விரோதமாயில்லாவிட்டாலும் அரைகுறை மனதுடன் கூடிய போக்கு ஆகியவை, மக்களின் மற்ற பிரிவினரை ஒதுக்கி தி மு. க. கட்சி, அதன் ஆதரவாளர் நலனுக்காகவேமந்திரிசபை இருக்கிறது என்ற எண்ணத்தை ஏற்படுத்தியுள்ளது.

தூய்மையான, திறமையான பாரபட்சமற்ற நிர்வாகத்தை அளிக்க அரசாங்கத்தின் திறமை பற்றி மக்களுடைய நம்பிக்கை அடியோடு அழிக்கப்பட்டு விட்ட ஒரு கட்டம் ஏற்பட்டு விட்டது.

இந்த காரணங்களினால், அரசியலமைப்பு ஷரத்துக்களின்படி மாநில அரசாங்கத்தை நடத்தி செல்ல முடியாத ஒரு நிலைமை ஏற்பட்டிருக்கிறது. எனவே, அரசியலமைப்பு 356-வது ஷரத்துப்படி மாநில நிர்வாகத்தை மேற்கொள்ளும்படி ஜனாதிபதிக்கு சிபாரிசு செய்கிறேன். மாநிலசட்டசபையையும்உடனடியாக கலைத்துவிடும்படியும் சிபாரிசு செய்கிறேன்.

பரவலாக பொதுஜன நலனை உத்தேசித்து மந்திரிசபை மீது சம்பந்தப்பட்டுள்ளமந்திரிகள் மீதும் கூறப்பட்டுள்ள பல கடுமையான புகார்கள் பற்றி விசாரிக்க ஒரு உயர்தரக கமிஷன் நியமிக்கப்பட வேண்டும் என்பதே என்னுடைய தீர்க்கமான கருத்தாகும். இத்தகைய நடவடிக்கைதான் பொதுமக்களிடையே நம்பிக்கையை ஏற்படுத்தும் எனறு கவர்னர் கூறினார்.

## இன்றைய சினிமா

**சென்னை**

காமதேனு: நல்லநேரம்
மேற்கு மாம்பலம் நேஷனல்: உலகம் சுற்றும் வாலிபன்
ராம்: கணவன் மனைவி
சராஸ்: பல்லாண்டு வாழ்க
நியூ எல்பின்ஸ்டோன்: அக்னி புஷ்பம்

**குரோம்பேட்டை**

வெற்றி: கர்ணன்
கணவன் மனைவி

**பல்லாவரம்**

லட்சுமி: தசாவதாரம்

**தாம்பரம்**

நேஷனல்: அந்தரங்கம்

**கொளத்தூர்**

ஸ்ரீ குமரன்: அன்பே ஆருயிரே

**திருக்கழுக்குன்றம்**

கன்னியப்பா: "சொந்தங்கள் வாழ்க"
புவனேஸ்வரி: ரோஷக்காரி

# நகர நிலத்துக்கு உச்சவரம்பு: சட்டம் நிறைவேறியது

புதுடெல்லி, பிப். 3—நகர நிலத்துக்கு உச்சவரம்பு விதிக்கும் சட்டம் மக்கள் சபையில் நேற்று நிறைவேறியது.

இதன்மீது நடந்த விவாதத்துக்குப் பதிலளித்து வீட்டு வசதி துறை அமைச்சர் ரகுராமையா பேசுகையில், நகரில் உள்ள காலி நிலத்துக்கு உச்சவரம்பு விதிக்கும் சட்டம் சோசலச சமுதாயத்தை அமைக்கும் நம் இலட்சியத்தின் ஒரு பகுதியே என்று கூறினர்

நகரில் உள்ள கட்டிடங்கள் இதில் உடபடுத்தப்படவில்லை என்று அமைச்சர் கூறினர்.

யாருடைய நிர்ப்பந்தம் காரணமாகவும் இது சேர்க்காமல் விட்டு விடவில்லை என்றும், கட்டிடங்களுக்கு உச்சவரம்பு விதிப்பதில சிக்கல் உள்ளதாலேயே இது விடப்பட்டது என்றும் அமைச்சர் கூறினர்.

இனிமேல் நகரங்களில் பெரிய ஆடம்பர வீடுகள் கட்டப்படுவதை தவிர்க்கும் பொருட்டு, அப்படிப்பட்ட வீடுகளுக்கு பலவத மான கடுமையான வரிவிதிக்க அரசு முடிவு செய்யப்பட்டிருக்கிறது என்றார் அவர். இது மாநில அரசின் முடிவுக்கு விடப்பட்டிருக்கிறது என்றும், இது குறித்து யோசனைகள் மாநிலங்களுக்கு அனுப்பப்பட்டிருக்கின்றன என்றும் அவர் தெரிவித்தார்.

உபரிநிலத்தை யார் வேண்டுமானாலும் விற்கலாம் என்றும் ஆனால் அரசின் முன் அனுமதி பெற்றுத்தான் விற்பனை செய்ய வேண்டும் என்றும் அமைச்சர் தெளிவாக்கினர்.

மசோதாவுக்கு எதிர்க்கட்சியினர் பல திருத்தங்களைக் கொண்டுவந்தனர். அவையெல்லாம் நிராகரிக்கப்பட்டன.

பிறகு சட்டம் நிறைவேறியது.

# கல்லூரியில் மாணவர்கள் அனுமதி: ஊழல் தடுக்க கவர்னர் புதுத் திட்டம்

சென்னை, பிப். 3—கல்லூரிகளில் மாணவர்களைச் சேர்த்துக்கொள்வதில் ஊழல்களைத் தடுக்க தமிழ்நாடு கவர்னர் கே. கே. ஷா புதியதொரு திட்டத்தை வெளியிட்டார்.

கல்லூரிகளில் சேர்வதற்கான நுழைவுத் தேர்வுகளை, நாட்டில் உள்ள எல்லா பல்கலைக் கழகங்களுக்கும் பொதுவான தேர்வாக நடத்தவேண்டும் என்று அவர் யோசனை கூறினார்.

தமிழ்நாடு கல்வி டிரஸ்ட், சென்னை எழும்பூரில் எத்திராஜ் கல்லூரி எதிரே கட்டியுள்ள ராணி மெய்யம்மை மாணவிகள் விடுதியின் திறப்பு விழா நேற்று நடந்தது. இந்த விழாவிற்கு கவர்னர் ஷா தலைமை தாங்கினார். அப்போது உரை நிகழ்த்துகையில் அவர் இந்த யோசனையை வெளியிட்டார்.

அவர் கூறியதாவது:—

கல்லூரிகளில் சேர்வதற்கு பல்வேறு பகுதிகளில் தனித்தனி தேர்வுகள் நடத்தப்படுவதால், அதில் பிராந்திய செல்வாக்கும், கல்லூரிகளின் செல்வாக்கும் ஏற்பட்டு வருகின்றன. இதற்குப் பதிலாக, எல்லாபல்கலைக்கழகங்களுக்குமாக ஒரே பொதுவான பரீட்சை நடத்தினால், இந்த ஏற்றத்தாழ்வுகள் நீங்கிவிடும்.

### ஊழல்களை தவிர்க்க முடியும்

இந்தப் பொதுப் பரீட்சையில் வெற்றி பெற்ற மாணவர்களின் மதிப்பெண்களின் அடிப்படையில், அவர்களைக் கல்லூரிகளில் சேர்த்துக் கொள்ளலாம். ஒவ்வொரு கல்லூரியிலும் சேரும் மாணவர்கள் பட்டியலையும், அவர்களது மதிப்பெண்களின் பட்டியலையும் பகிரங்கமாக வெளியிடும்படி வற்புறுத்தலாம்.



### தொழில் அதிபர்களுக்கு கோரிக்கை

தமிழ்நாடு கல்வி டிரஸ்ட் அமைக்கும் விடுதிகளில் தகுதி அடிப்படையிலேயே மாணவ மாணவியர் சேர்த்துக்கொள்ளப்படுவார்கள் என்றும், மற்றபடி மதம், ஜாதி, இனப் பாகுபாடுகள் ஏதும் பார்க்கப்படாது என்றும், அவர் சொன்னார். இந்த விடுதிகளில் தங்கிப் படிக்கும் மாணவர்களுக்கு அவர்கள் படிப்பு முடிந்ததும் வேலை வாய்ப்பு தருவதற்கு தொழில் அதிபர்கள் முன்வர வேண்டும் என்று அவர் கேட்டுக் கொண்டார்.

தமிழ்நாட்டின் பல இடங்களில் மாணவிகளுக்காக 4 விடுதிகளையும், மாணவர்களுக்காக 10 விடுதிகளையும், தமிழ்நாடு கல்வி டிரஸ்ட் கட்டியுள்ளது. மாணவிகளுக்காக மேலும் 10 விடுதிகளையும் மாணவர்களுக்காக மேலும் 4 விடுதிகளையும் இந்த டிரஸ்ட் கட்டும் என்று கவர்னர் தெரிவித்தார்.

விடுதிகளில் இடம் கிடைக்காத மாணவிகளுக்கு உபகாரத் தொகைகள் வழங்கவும் இந்த டிரஸ்ட் திட்டமிட்டுள்ளது என்று அவர் சொன்னார் மாணவியர் விடுதிகளை அமைப்பதற்காக எம். ஏ. முத்தையா செட்டியார் பெருந்தொகைகளை நன்கொடை அளித்துள்ளதாக கவர்னர் தெரிவித்தார்.

## உமாசங்கர் தீட்சித் யோசனை

ராணி மெய்யம்மை மாணவியர் விடுதியை கர்நாடக கவர்னர் உமாசங்கர் தீட்சித் திறந்து வைத்தார். கல்வி நுண்கலை ஆகியவற்றின் வளர்ச்சிக்காக பெரும் தொகைகளை நன்கொடையாக அளிப்பவர்களுக்கு வரி சலுகைகள் அளிக்கலாம் என்று அவர் யோசனை கூறினார். தனியாரின் நல் முயற்சிகளை வரிக் கொள்கை ஓரளவு பாதித்துள்ளது என்று தீட்சித் குறிப்பிட்டார்.

காந்திஜி அறிவித்த "தர்மகர்த்தா" கொள்கை பற்றியும் தீட்சித் குறிப்பிட்டார். பொதுநலனுக்கு உதவுவதுதான் சொத்துடமைக்கு அழகாகும். சமுதாயத்தில் பொருளாதார மறுமலர்ச்சியை ஏற்படுத்துவதற்கு உரிய எளியவழி "தர்மகர்த்தா" கொள்கையே என்று அவர் கூறினார்.

இளைஞர்களிடையே சிறந்த தலைவர்களை உருவாக்கித் தருவதற்கு, நமது கல்வி முறை தவறிவிட்டது என்று அவர் கூறினார். நாட்டின் அரசியல் நெருக்கடிகளுக்கு இதுவே காரணம் என்று அவர் சொன்னார்.

இந்த விழாவில் எம். ஏ. முத்தையா செட்டியார் வரவேற்புரை ஆற்றினார். சிறந்த புத்திசாலியான மாணவர்களின் படிப்புக்கும் வேலை வாய்ப்புக்கும் உதவி புரிவதற்கு இந்த டிரஸ்ட் உதவும் என்று அவர் நம்பிக்கை தெரிவித்தார்.

திருமதி மதுபென்ஷா, முன்னாள் தமிழக மந்திரி ஆர் வெங்கட்ராமன் ஆகியோரும் இந்த விழாவில் கலந்து கொண்டனர். சென்னையில் அமைக்கப்பட்டுள்ள இந்த மாணவியர் விடுதியின் நிர்வாகப் பொறுப்பைத் திருமதி மதுபென் ஷா வகிப்பார் என்று அறிவிக்கப்பட்டது. எம். ஏ. எம். ராமசாமி நன்றி கூறினர்.

3-ம் பத்தி தொடர்ச்சி

என்று மறைமுகமாக மிரட்டல்கள் விடுக்கப்பட்டன.

### மாநில சுயாட்சி

"அவர்களுடைய பொதுப் பேச்சுக்களில், வங்காள தேசத்தில் நடந்த சம்பவங்களுடனும், ஷேக் முஜிபுர் ரஹ்மானுக்கு ஏற்பட்ட கதியுடனும் ஒப்பிட்டுப் பேசப்படுகின்றன.

மாநில சட்டமன்றத்தின் ஆயுள் நீடிக்கப்படாவிட்டால் தமிழ்நாட்டில் முழுப் புரட்சி நடக்குமென்று சில திமுக தலைவர்கள் மிரட்டல் விடுத்தனர்.

# உலகிலேயேமிக நீளமானரயில்பாதை

மாஸ்கோ, பிப். 3—ரஷ்யாவில் டிரான்ஸ்-சைபீரியா இருப்புப் பாதைக்கு இணையாக உலகிலேயே மிக நீளமான இருப்புப் பாதை ஒன்று போடப்படவிருக்கிறது. 1983 இந்த இருப்புப்பாதை திறக்கப்படும். அப்போது இதன் நீளம் 3,145 கிலோ மீட்டராகவிருக்கும். 'பாம்' என்பது இதன் பெயர்.

இந்த பைக்கால்—அமூர் இருப்புப்பாதை, உலகிலேயே மிகப் பெரிய இருப்புப்பாதையாகும். இந்த இருப்புப்பாதை பலவித பூகோள அமைப்புள்ள நிலங்களையும், பனிப் பிரதேசங்களையும் சதுப்பு நிலங்களையும் கடந்து செல்கிறது. கோடைக்காலம், பனிக்காலங்களில் தட்பவெப்பவித்தியாசம் 80-90 டிகிரி சென்டிகிரேட் இருக்கக்கூடிய பிரதேசங்கள் மூலமாகவும் செல்கிறது.

பைக்கால்-அமூர் இருப்புப் பாதை, 3,200 நதிகளையும், நீரோடைகளையும், பள்ளத்தாக்குகளையும் கடக்கவிருக்கிறது. தவிர, இது 2 800 மீட்டர் உயரமுள்ள ஏழு மலைகளின் வழியாகச் செல்லவிருக்கிறது. இதன் பாதையில் 200 ரெயில் நிலையங்கள் அமைக்கப்படவிருக்கின்றன 142 பெரிய பாலங்கள்கட்டப்படவிருக்கின்றன. இப்பாதை செல்லும் வழியில் 5 ஆயிரம் ஹெக்டார் காடுகள் அழிக்கப்படவிருக்கின்றன.

இம்மாபெரும் ரெயில் பாதை அமைப்பதன் முக்கிய நோக்கம், கிழக்கு சைபீரியா இயற்கை வளம் கொழிக்கும், பூமியாகும், மரம், மரக்கூழ், செம்பு, இரும்புத் தாது, தேனிரும்பு, இரும்பு, நிலக்கரி, கனி வளங்கள் கொண்டதாகும்.

இத்திட்டத்தை முடிப்பதற்கு 9 ஆயிரத்திற்குமேலான பெரும் லாரிகள் பயன்படுத்தப்பட இருக்கின்றன இந்த லாரிகளை மேற்கு ஜெர்மனியில் உள்ள மாகிரூஸ் தெவ்ஸ் கம்பெனி சப்ளை செய்து வழங்கியுள்ளது.

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Editor in charge:
G. Dhanaraj